# வார்தா திட்டம்

பெ. கோ. சுந்தரராஜன், பி. ஏ., எல். டி.

கனம் விளம்பர மந்திரி

ஸ்ரீ. எஸ். ராமநாதன் அவர்கள்

முகவுரையுடன்



1938

மணிக்கொடி புஸ்தகசாலை

ஜி. டி. மதராஸ்.

[விலை 8 அணா

# வார்தா திட்டம்

பெ. கோ. சுந்தரராஜன், பி. ஏ., எல். டி.

கனம் விளம்பர மந்திரி

ஸ்ரீ. எஸ். ராமநாதன் அவர்கள்

முகவுரையுடன்



1938

மணிக்கொடி புஸ்தகசாலை

ஜி. டி. மதராஸ்.

[விலை 8 அணா

# முகவுரை

பிள்ளைகள் பள்ளிக்கூடம் போகவேண்டுமென்றால் அழ ஆரம்பிக்கிறார்கள். விளையாடப் போவதென்றால் சந்தோஷப் படுகிறார்கள். இது ஏன்? விளையாட்டில் அவர்களுக்கு ருசி இருக்கிறது; படிப்பில் ருசி இல்லை. ருசி யில்லாத படிப்பை அவர்களுக்குக் கட்டாயப்படுத்திக் கொடுத்தால் அவர்களு டைய வளர்ச்சி குன்றிப்போகிறது; முக வசீகரம் குறைந்து ஆரோக்யமும் அழிந்துபோகிறது. விளையாட்டிலோ என் றால், அவர்களுடைய இயற்கை வளர்ச்சி பெருகி, தேக ஆரோக்யமும் மன உற்சாகமும் அதிகரிக்கின்றன. விளை யாட்டிலுள்ள ருசியைப் படிப்பில் கொண்டுவர முடியுமா, முடியாதா? முடியா தென்பது வைதீக உபாத்தியாயர்களின் துணிபு. முடியுமென்ற நம்பிக்கையில் வார்தா திட்டம் வகுக் கப்பட்டிருக்கிறது.

நான் சிறு பிள்ளையாகப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் விளையாட்டு நேரத்தைத் தவிர வகுப்பு உபாத்தியாயரோடு கழித்த நேர மெல்லாம் மிகுந்த சிரமத்தோடு கழித்ததாகத்தான் சொல்லவேண்டும். ஆனால், அத்தி பூத்ததுபோல், ஒன்றிரண்டு சமயங்களில் வகுப்பிலும் சந்தோஷப்பட்டதாக ஞாபக மிருக்கிறது. அந்தக் காலத் தில் விவசாயக் கல்வி புகட்டுவதற்காக "அக்ரிகல்ச்சர்" (Agriculture) என்று ஒரு பாடம் அமைத்து அதற்கு ஒரு உபாத்தியாயரும் நியமித்திருந்தார்கள். பரீட்சார்த்தமாக

நான் படித்த பள்ளிக்கூடத்தில் மாத்திரந்தான் இந்தப் பாடம் கற்பிக்கப்பட்டது. இந்தப் பாடத்தையும் இந்த உபாத்தியா யரையும் பற்றிப் பள்ளிக்கூட மேலதிகாரிகளும் மற்ற உபாத் தியாயர்களும் கேவலமாக நினைத்து வந்தார்கள். பிள்ளைகளுக் குக்கூட இந்த உபாத்தியாயரைக் கண்டால் இளக்காரம். "அக்னி கழிச்சல்" என்று அவரைக் கூப்பிடுவார்கள். பேச்சள வில் எவ்வளவு ஏளனமான வார்த்தைகளை உபயோகப்படுத்தி னாலும், உண்மையில் அவருடைய பாடம் வந்துவிட்டால் பிள் ளைகளுக்குக் கொண்டாட்டந்தான். அந்த உபாத்தியாயர் புஸ் தகமொன்றையும் படிக்கச் சொல்லுவதில்லை. நேரே எங்களைத் தோட்டத்திற்கு அழைத்துக்கொண்டு போய் மண்ணைப் பெயர்த்துப் பாத்தி கட்டச் சொல்லுவார்; விதையை நடச் சொல்லுவார். பாத்திக்குத் தண்ணீர் பாய்ச்சுவது நல்ல விளையாட்டாக இருக்கும். எங்கள் கையால் நட்ட விதையில் முளைவரக் காண்பதையும், நாளுக்கு நாள் அந்த முளை நீண்டு இலையாக விரிவதையும் நாங்கள் கண்டு அடைந்த ஆனந்தத் திற்கு அளவே யில்லை. உபாத்தியாயர் கொடுத்த விதைகளில் நான்கைந்தை நான் திருடி வீட்டுக்குக் கொண்டுபோய், அங்கே ஒரு சட்டியில் சேற்றைப் பிசைந்து அதில் நட்டு, அதைப் பெற்றோர்கள் பார்க்காமல் மறைத்துவைத்துப் பாதுகாத்து வந்தேன். இந்தத் திருட்டுச் சாகுபடி செய்த தில் நான் அடைந்ததுதான் என் பள்ளிக்கூட வாழ்க்கை யில் அதிக சந்தோஷமுள்ள கட்டமாகும்.

பிறகு காலேஜில் படித்தபொழுது ஸயன்ஸ் உபாத்தியா யர் சில சமயம் எங்களை ரசாயனப் பரிசோதனை செய்யச் சொன்னபோது அம்மாதிரி சந்தோஷமும் பழைய திருட்டுச்

சாருபடி ஞாபகமும் எனக்கு வருவதுண்டு. இவ்வாறு நான் அகஸ்மாத்தாய் அடைந்த சந்தோஷத்தைப் பிள்ளைகளுக்கு ஏன் நிரந்தரமாகக் கொடுக்கக்கூடாது என்பதுதான் வார்தா திட்ட ஆராய்ச்சி.

ஐம்புலன்களாலும் ஸ்பரிசித்து ஆக்கக்கூடிய தொழில் மூலந்தான் பிள்ளைகள் உண்மை வளர்ச்சி அடைய முடியும். அவ்வித வளர்ச்சிதான் கல்வியாகும். மற்றைய தற்போதைய கல்வித் திட்டங்களி லெல்லாம் பிள்ளைகளின் புலன்களைக் கட்டி அடக்கி வைத்துவிட்டு உபாத்தியாயருடைய தூண்டுத லுக்கு ஒரு கருவியாகப் பிள்ளைகள் கருதப்படுகிறார்கள். இப் படிப்பட்ட படிப்பில் குழந்தைகளுக்கு ருசி இருக்க முடியாது. ஆகவே இப்படிப்பட்ட பள்ளிக்கூடங்கள் நமது நாட்டுக் குழந் தைப் பருவத்தையே அடக்கிவைக்கும் காராக்கிரகங்களாகும். இந்த ஜெயில்களிலிருந்து குழந்தைகளை விடுதலை செய்யும் திட்டம் வார்தா திட்டந்தான்.

ஏதோ ஒரு பையில் சாமானைப் போட்டுத் திணிப்பது மாதிரி பிள்ளைகளுடைய மூளையில் புஸ்தகங்களைத் திணிப்பது தான் தற்காலத்திய கல்வியின் நோக்கமாகும். ஒரு பையில் எவ்வளவுக் கெவ்வளவு சாமான்கள் திணிக்கப்படுகின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு பை கனங்கொள்வதால் அதைத் தூக் கிச் செல்வது கஷ்டமாகிவிடுகிறது. அதைப்போல் எவ்வள வுக் கெவ்வளவு தற்காலப் படிப்பை அதிகமாய் வாசிக்கிறானோ அவ்வளவுக் கவ்வளவு பையன் பாரமுள்ள மூட்டையைப் போல் பிறரால் தூக்கிச் செல்லப்பட வேண்டுமே யொழியத் தானாகவே இயங்குவதற்குச் சக்தியற்றுப் போகிறான். படிப்பென்பது வாழ்க்கையை நடத்துவதற்கு ஒரு பயிற்சியா

யிருக்கவேண்டுமே யொழிய நம்மைத் தடுப்பதற்கு ஒரு பாரமாய்ப் போய்விட்டதால்தான் படித்தவர்கள் வேலையின்றித் திண்டாடுகிறார்கள். உண்மையில் படித்தவர்களுக்கு ஏன் ஒருவரும் வேலை தேடிக் கொடுக்கவில்லை? தன் வாழ்க்கையை நடத்துவதற்குப் பிறருடைய கையை எதிர்பார்ப்பவன் படித்தவனாவானா? பள்ளிக்கூடத்திற்கே போகாதவர்கள், அவர்களுடைய அங்க அவயவங்கள் வளர்ச்சி குன்றாமலிருப்பதால், எந்த வேலையிலாவது ஈடுபட்டு அவர்கள் வாழ்க்கையை நடத்த முடிகிறது. அவர்கள் கொத்த முடியும், வெட்ட முடியும், வண்டி யோட்ட முடியும், மூட்டை தூக்க முடியும். தற்காலப் படிப்புப் படித்தவர்கள் இவற்றில் எதையும் செய்ய முடியாது. பெற்றோர்கள் பணத்தைச் செலவழிக்கத் தெரியும், விண்ணப்பம் எழுதத் தெரியும், "சிபாரிசு, சிபாரிசு" என்று ஏங்கித் திரியத் தெரியும். இந்தக் கேவல நிலைமையிலிருந்து நமது வாலிபர்களுக்கு விடுதலை வேண்டுமானால் கல்வித் திட்டத்தில் ஒரு பெரும் புரட்சி தோன்ற வேண்டும். அந்தப் புரட்சிதான் வார்தா திட்டம் என்பது. அந்தப் புரட்சியை ஸ்ரீ சுந்தரராஜன் விளக்கமாக இந்தப் புத்தகத்தில் தெரிவிக்கிறார்.

சென்னை,
1-6-'38

எஸ். ராமநாதன்.

---

# பொருளடக்கம்

அத்தியாயம்

# வார்தா திட்டம்

## 1. கல்வி நிலைமை

பிரதம மந்திரி ராஜாஜி ரயில் பிரயாணம் செய்துகொண் டிருந்தார். அருகில் ஒரு பெண்ணும் அவளுடைய தகப்பனாரும் இருந்தனர். அந்தப் பெண் தன் தகப்பனாரிடம் வார்தா திட்டம் என்றால் என்னவென்று கேட்டாள். ஸ்ரீ. சி. ஆர். அதை வார்தா திட்டம் என்று சொல்லுவதைவிட வர்தா திட்டம் என்று சொல்லுவதே நல்லது என்றாராம். இங்கிலீஷ் பத்திரிகைகளில் உச்சரிப்புத் தவறி வர்தா ஸ்கீம் என்று வாசிப்பவர்கள் தான் சரியாக உச்சரிக்கிறார்கள் என்று இப்பொழுது சந்தோஷப்படலாம். வர்தா என்றால் சம்ஸ்கிருதத்தில் முன்னேற்றம் என்று அர்த்தமாம். தேசிய விஷயங்களின் புண்ணிய ஸ்தலமாகிய வார்தாவில் தயாரிக்கப்பட்ட ஒரு திட்டம் முன்னேற்றத்தை முக்கியக் கருத்தாகக் கொள்ளாம லிருக்குமா? ஆனால் இந்தத் திட்டத்திற்கும் நாள் தவறாமல் ஆக்ஷேபணைகளோ அபிப்பிராய பேதங்களோ சொல்லி முடியாது!

யார் எதைச் சொன்னாலும் ஆக்ஷேபித்துத் தீருவது என்று சிலர். "மகாத்மா காந்தியின் யோசனையா யிருந்தா லென்ன? ஏன் ஆக்ஷேபிக்கக் கூடாது? அவரும் மனிதர்தானே!" என்று சிலர். இவ்விரு கூட்டத்தாருக்கும் வார்தா திட்டத்தைப் பற்றி ஏற்பட்ட ஆக்ஷேபணைகளும் அபிப்பிராய பேதங்களும் கிட்டத்தட்ட கடன்நிவாரண மசோதா வின் ஆக்ஷேபணைகளின் எண்ணிக்கைகளை ஒத் திருந்தன.

வார்தா திட்டத்தினால் தங்களுடைய சம்பளம் குறைந்து விடுமே என்று பயப்படும் வாத்தியார் களின் ஆக்ஷேபணைகளை ஒருவாறு அறிந்துகொள்ள லாம். "ஐயோ, பையன்களைக் கொன்றுவிடுவார் களே! கைத்தொழில்கள் போய்விடுமே! பொது வுடைமை வந்துவிடுமே!" என்று ஓலமிடும் பேர் வழிகளின் ஆக்ஷேபணைகள்தான் அர்த்த மில்லா மல் இருக்கின்றன. வருஷக் கணக்காக ஒரு விரு தாத் திட்டத்தின் மூலம் கல்வி போதித்து, வேலை யின்மையை ஒரு பக்கமும் எழுத்தறிவின்மையை மற்றொரு பக்கமும் உண்டாக்கிய பிறகும், முன் னேற்றத்தையும், பொது அறிவையும் அடிப்படை யாகக் கொண்ட வார்தா திட்டம் வேண்டா மென்று சொல்வது வெறும் தற்கொலை மனப்பான்மை என்றே சொல்லவேண்டும்.

தற்போதைய கல்வித் திட்டம் ஒரு காசுக்கும் பிரயோசன மில்லை என்பதைப் பற்றி மாத்திரம்

அபிப்பிராய பேதம் இல்லையென்றே சொல்லலாம். ஆனால் இதுவரை இந்தக் கல்வி முறையைச் சீர் திருத்துவதற்கு நல்ல முறை ஒன்றும் கையாளப் படவில்லை. சீர்திருத்தத்தைப் பற்றி யோசிக்கும் போதே பலவித இடையூறுகள் குறுக்கிடுகின்றன. கல்வி நிர்வாகத்திற்குப் பொறுப்பாளிகளாக இருக் கும் உத்தியோகஸ்தர்கள் மாத்திரம் இந்தச் சீர் திருத்த வேலையைக் கைக்கொண்டால் நிர்வாக விஷ யத்தோடு சீர்திருத்தம் நின்றுவிடுகிறது. பள்ளிக் கூடத்தில் குழந்தைகளுக்குப் போதிக்கப்படும் பாடத் திட்டத்தில்தான் தீமையின் வேர் முழுவதும் ஊன்றி யிருக்கிறது என்பதைச் சரியாக அறி யாததே இதற்குக் காரணம்.

---

## 2. காலத்தின் தேவை

பெற்றோர்கள் படித்த பிள்ளைகளை வைத்துக் கொண்டு 'வேலை கிடைக்கவில்லையே!' என்று வருந் தும் காட்சி நமது நாட்டில் சர்வ சாதாரணமாகி விட் டது. இந்த ஸ்திதியில் படித்துப் பிரயோசனமில்லை என்ற மனப்பான்மை தோன்றுவதில் ஆச்சரிய மில்லை. ஆனால் இதே சமயத்தில் நாட்டில் போதிய எழுத் தறிவு இல்லை. படிப்புப் போதாது. பெரும்பா லான ஜனங்களுக்குப் படிக்க வசதியில்லை என்று அறிந்தவர் கூறுவது புரிகிறதில்லை. எப்படியும் இவ் விரண்டும் உண்மைதான். இந்த நிலைமையைச் சீர் திருத்தி இவ் விரண்டு அசம்பாவிதங்களையும் ஒரே

வழியில் தவிர்க்க முற்படுவதுதான் வார்தா கல்வித் திட்டத்தின் நோக்கம்.

கல்வி நிர்வாக இலாகாவுக்கு இப்போதிருக்கும் நிலையைச் சரிவரச் சீர்திருத்தச் சந்தர்ப்பம் கிடைக்காமற் போனது நிர்வாகத் தொல்லைகளினால் மட்டுமல்ல; தீர்க்க தரிசனமான மனப்பான்மை இல்லையென்பது மட்டுமல்ல; கல்வி விஷயங்களில் பொது ஜன கவனம் அதிகமாகச்செலுத்தப்படாததுதான். தங்களுடைய பிள்ளைகள் கல்வியால் அடையும் லாபமும் நஷ்டமும் தங்களுடையது என்று பெற்றோர்கள் சரிவர உணராமல், பலன் கிடைக்காதபோது கல்வித் திட்டத்தை நொந்துவிட்டுப் பேசாமலிருந்துவிட்டார்கள். பிள்ளைகளுக்குச் சரியான கல்வி போதிக்க வசதிகள் இல்லை, இருப்பதை வைத்துக் கொண்டு சமாளிக்க வேண்டியதுதான் என்ற தோல்வி மனப்பான்மை குடிகொண்டு விட்டது. பிள்ளைகளின் இயற்கையையும் சமூகத்தின் தேவைகளையும் உணர்ந்து போதியகிளர்ச்சி செய்யாமலிருந்ததே சீர்திருத்தம் தாமதப்பட்டதற்கு முக்கிய காரணம். தற்போது அமுலிலிருக்கும் கல்வித் திட்டத்தின் பயனில்லாமையைப் பெற்றோர்கள் உணர்ந்துவிட்டதாகக் காட்டிக்கொள்ளாத வரையில் சீர்திருத்தத்துக்குத் தேவை யில்லாமல் போய்விட்டது. மேலும், பெற்றோர்களிலேயே பலர் போதிய எழுத்தறிவு இல்லாமல் இருக்கும் ஜனத்தொகை நிறைந்த

இந்நாட்டில் கல்வி விஷயங்களில் கிளர்ச்சிகள் ஆரம்பமாவதும் கஷ்டமாகவே இருந்தது.

கல்வி விஷயங்கள் வாத்தியார்கள் மகாநாட்டிற்கு மாத்திரம் சம்பந்தப்பட்டவை யல்ல. சமூகம் முழுவதையும் பாதிப்பவை; பொது ஜனங்களும் இவைகளில் கவனம் செலுத்தவேண்டும் என்பதற்கு உதாரணமாக வார்தா திட்டம் இப்பொழுது எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்திருக்கிறது. சமூக அரசியல் முன்னேற்றத்துக்கு நல்ல முறையான கல்வியே விமோசனம் என்று இப்பொழுது அறியப்படுகிறது. இதற்கு வேண்டிய கிளர்ச்சி இல்லாதபோது, சீர்திருத்தத்தின் தேவைக்குப் போதிய வேகமும் சக்தியும் அளிப்பதற்குச் சரியான தலைமை இல்லாமல் இதுவரை சரியான திட்டம் வகுக்கச் சாத்தியப்படாம லிருந்தது. அப்படிப்பட்ட தலைமை இப்பொழுது கிடைத்துவிட்டது.

"மற்றும் பல துறைகளில் கிடைத்தது போலவே, இதிலும் மகாத்மா காந்தியின் தீர்க்க தரிசனமான தலைமை, இந்த நெருக்கடியான சமயத்தில், நமக்குக் கிடைத்திருக்கிறது. இந்திய மேதைக்குப் பொருத்தமானதும், கூடிய சீக்கிரத்தில் பாமர மக்கள் கல்விப் பிரச்னையைத் தீர்க்கக் கூடியதுமான ஒரு கல்வித் திட்டத்தைத் தயாரிப்பதில் மகாத்மா காந்தி பூரண உற்சாகத்தோடு ஈடுபட்டிருக்கிறார்" என்று வார்தா திட்டக் கமிட்டியார் தங்களுடைய வழிகாட்டியைப் பற்றிப் பாராட்டிச்

சொல்லி யிருக்கிறார்கள். மகத்தான அரசியல் கிளர்ச்சிகளுக்கும், சமூகக் கிளர்ச்சிகளுக்கும் காரண பூதராயிருந்து உற்சாக மளித்த காந்திஜி மிக வும் கவலைக் கிடமாயிருந்த இந்தக் கல்விப் பிரச்னை யிலும் நமக்கு வழிகாட்டியாக வாய்த்தது நம் அதிருஷ்டந்தான்.

ஆயினும் காந்திஜி இப்படிக் கல்வித் திட்டத் தயாரிப்பில் கலந்துகொண்டதில் எவ்விதமான வியப்பிற்கும் சிறிதும் இடமில்லை. ஏழைகளின் கண் ணீரைத் துடைத்து விடுதலை செய்ய முன் வந்து, கழிந்த பல நூற்றாண்டுக் கணக்காகக் கஷ்டப் பட்டுவந்த ஹரிஜனங்களை மீட்டபின், அவர்க ளுடைய முன்னேற்றத்திற்காகவும், பள்ளிக்கூடம் என்ற சிறையில் அடைபட்டுத் தவிக்கும் குழந்தை களுக்கு விடுதலை யளிக்கவும் சாதகமான ஒரு திட் டத்தைக் காந்திஜி தயாரிக்க முன்வந்தது இயற்கை தான்.

---

## 3. திட்டத்தின் நோக்கம்

காந்திஜியின் உற்சாகத்தினால் டாக்டர் ஜாகிர் ஹுசேன் தலைமையில் வார்தாவில் கூடிய கமிட்டி தயாரித்த கல்வித் திட்டம் தற்போது வழக்கத்தி லிருக்கும் ஆரம்பக் கல்விக்குப்பதிலாகத் தயாரிக்கப் பட்டது. பள்ளியில் எழுத்தறிவுக்காக வந்து சேரும் பிள்ளை களுக்கு 14 வயதுக்குள் எழுத்தறிவோடு கைத்தொழில்

திறமையும் போதித்து அவர்கள் ஜீவனத்துக்காக வேலை செய்து பிழைக்கும் சக்தியை அடையும்படி செய்வதே இந்தத் திட்டத்தின் அடிப்படையான நோக்கம்.

உலக முழுவதும் தேசீய சர்வதேச வாழ்க்கையில் பல மாறுதல்கள் ஏற்பட்டுப் பொதுஜனங்களிடை புது விஷயங்களைப் பற்றிய அறிவுக்குத் தேவை ஏற்படும்போது, நமது பிள்ளைகளுக்குப் போதிக்கப்படும் கல்வி, அவர்களுடைய சுற்றுப் புறத்திற்குப் பொருத்த மில்லாததாயும், ஒருவித மான உற்சாகமும் ஆதர்சமும் இல்லாததாயும் தேங்கிக் கிடக்கிறதென்று வார்தா திட்டக் கமிட்டி கருதுகிறது.

இந்த நிலைமையை இதற்கு முன்னால் அறிந்து சீர்திருத்த முன்வந்தவர்கள் மேல் நாடுகளில் ஏற்பட்ட சீர்திருத்தங்களின் கொள்கைகளைப் பின்பற்றி வந்திருக்கின்றனர். மேல் நாடுகளில் முன்னேறி வரும் போதனை முறை விஷயங்களை நம்முடைய தேவைகளுக்குத் தக்கவாறு தழுவி அமைத்துக்கொள்ளலாமே யன்றிப் பாடத் திட்டத்தின் மொத்த உருவை அப்படியே எடுத்துக்கொள்ள முடியாது. நமது தேவைகள் நம் நாட்டின் விசேஷ அம்சங்களைப் பொறுத்தனவா யிருக்கின்றன. "மேல் நாடுகளைப் போலல்லாமல் இந்தியாவில் நாட்டினர் எல்லோரும் சமாதான வழியாக அஹிம்ஸையைப் பின்பற்றி வருகிறார்கள். பூரண சுதந்திரத்திற்கு இந்த மார்க்கமே பின்பற்றப்படுகிறது. நமது

பிள்ளைகளுக்குப் பலாத்காரத்தைக் காட்டிலும் அஹிம்ஸையே சிறந்ததென்பதை நாம் போதிக்க வேண்டும். " இந்தக் காரணத்தினால் இந்தியக் குழந்தைகளுக்காகத் தயாரிக்கப்பட்ட எந்தக் கல்வித் திட்டமும் மேல்நாட்டுத் திட்டங்களிலிருந்து (சில அம்சங்களில்) முற்றிலும் வேறுபட்டதாகவே இருக்கும் என்று வார்தா கமிட்டி கூறுகிறது.

பிள்ளைகளுக்குப் போதிக்கப்படும் கல்வி லாபகரமானதாக இருக்கவேண்டும் என்பதே திட்டத்தின் அடிப்படையான முதல்தரமான கொள்கை. நாடு முழுவதும் எழுத்தறிவு பரவவேண்டுமானால் கட்டாய இலவசக் கல்வி முறை இன்னும் அதிகமாக விஸ்தரிக்கப்பட வேண்டும். இப்போதைய பொருளாதார அரசியல் நிலையில் பயனில்லாத செலவு செய்து இம் முறையைக் கையாளுவது மிகக் கஷ்டம். இதை உத்தேசித்துத்தான் போதிக்கப்படும் கல்வி பொருள் உற்பத்தி செய்யும் ஒரு கைத்தொழிலின் மூலம் நடக்கவேண்டும் என்று மகாத்மா தீர்மானித்தார். பள்ளியில் சிறுவர் கற்றுக்கொள்ளும் கைத்தொழில் மூலம் உற்பத்தியாகும் பொருள்கள் உபாத்தியாயர்கள் சம்பளத்திற்கு வேண்டிய பணத்திற்கு உதவி செய்யும்.

பள்ளிக்கூடங்களில் கைத்தொழில் மூலம் கல்வி போதிக்கப்படுவது பல அம்சங்களிலும் சிறந்த முறை என்பதை இந்தத் திட்டம் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

---

## 4. அடிப்படைத் தொழில்

இப்போ திருக்கும் நிலையில் சிறுவர்கள் பள்ளிக் கூடம் போவ தென்றால் மனோ வேதனைப் பட்டு வருந்துவது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஒரு பையன் "பள்ளிக்கூடம் போகமாட்டேன்" என்று முரண்டு செய்வதற்குக் காரணம், அவனுக் குப் படிப்பில் இஷ்டமில்லை, அவன் குணம் அடிப் படையாக மிகவும் மோசமானது என்பதல்ல; பள் ளிக்கூடத்தில் நடக்கும் பாடங்கள் அவனுடைய இயற்கை யுணர்ச்சிகளுக்கு முற்றிலும் முரண்பட்ட வையா யிருக்கின்றன. "காலை முதல் மாலை வரை உட் கார்ந்து, ஏன் இந்த விஷயங்களை யெல்லாம் நாம் படிக்கிறோம்?" என்ற காரணம் தெரியாமலே, அவன் உற்சாக மின்றிப் பாடங்களைக் கேட்கவேண்டி யிருக் கிறது. உபாத்தியாயர் தண்டனைக்கும் பெற்றோர் கோபத்துக்கும் பயந்து அவ்வப்போது கற்கும் விஷயங்களில் சிறிது வெறுப்புடன் அவன் ஈடுபடு கிறான். அப்படியே அவன் பாடம் முழுவதிலும் ஈடுபட்டுக் கற்றுக்கொண்டாலும் அவனுடைய மூளை மாத்திரமே விருத்தி யடைகிறது. கை கால் களுக்குச் சரியான வளர்ச்சி ஏற்படாமல், தாரதம் மிய மின்றி, மூளை மாத்திரம் வளர்ச்சி யடைவதை ஒழித்து, மூளையும் தேகமும் பொருந்திச் சமமான வளர்ச்சி யடைவதற்குப் பாடத் திட்டத்தின் அடிப் படை ஒரு கைத்தொழிலா யிருந்தால் முடியும். இந் தக் கைத்தொழிலைக் கற்றுக்கொள்ளும் போது

பையனுடைய கை கால்களுக்கும் அவயவங்களுக்கும் வேலை ஏற்படுவதனல் அவனுடைய தேகம் முழுவதற்கும் ஒரு முன்னேற்றம் ஏற்படுகிறது; வெறும் பாடங்களைக் கேட்பதோடு நில்லாமல் ஒரு பொருளைச் செய்வதில் தானும் ஈடுபடுவதை நினைத்து உற்சாகத்துடன் பையன் அதைக் கற்றுக்கொள்ள ஆசைப்படுவதால், கைத்தொழில் வழியாய் அவனுக்குக் கல்வியில் உள்ள வெறுப்பைப் போக்கி விடலாம். எப்பொழுதும் ஏதாவது விஷமம் செய்து கொண்டிருக்கும் மனப்பான்மையை யுடைய சிறுவனை, அவனுடைய இயற்கைக்கு மாருக, கைகட்டி, வாய் புதைத்து ஓரிடத்தில் உட்கார வைக்காமல், அவனுடைய கைகளுக்கு ஏதாவது வேலை கொடுத்தால் அவனுடைய மனப்பான்மையை ஒரு உபயோககரமான வழியில் திருப்பிவிடலாம். இதனல் தான் மனேதத்துவ விஷயமாக ஆராய்ந்தாலும் கல்வித் திட்டத்தில் ஒரு அடிப்படையான கைத்தொழில் வரவேற்கத் தக்கதா யிருக்கிறது.

'பரீக்ஷைகள் தேறிவிட்டு ஆபீஸ்களில் போய் வேலை செய்துகொண்டிருக்க வேண்டும்' என்ற கனவுகள் காண்பதற்குத் தற்போதைய கல்வித் திட்டம் நிரம்பச் சாதகமா யிருந்திருக்கிறது. வேலையின்மையாகிய கொடுமை தலை யெடுத்ததும், நன்ருய் விருத்தி செய்துகொண்டு வந்த மூளையை விற்றுவிட்டுக் கேவலம் கைத்தொழில் செய்து ஜீவனம் செய்ய வேண்டியிருக்கிறதே என்று எத்தனையோ பேர்

வருந்தி யிருக்கிறார்கள். மூளை சம்பந்தமான தொழிலுக்கும் கைத்தொழிலுக்கும் ஒருவித உயர்வு தாழ்வு வேற்றுமை ஏற்பட்டு, வாழ்க்கைத் திட்டத்தைத் தடுத்துவிடுகிறது. இந்த வேற்றுமை மனப்பான்மையினால் சமூகத்திற்குப் பெருந் தீமையே பலன். இந்தத் தீமைக்கும் வேற்றுமைக்கும் காரணமா யிருந்தது, கைத்தொழில் பயிற்சியும் புத்தகப் படிப்பும் ஒன்றுக்கொன்று பரஸ்பரம் உதவி செய்ய வேண்டியவை என்ற எண்ணம் தோன்றுவதற்குச்சந்தர்ப்பம் இல்லாமல் போனதுதான். தச்சனோ, கொல்லனோ, நூல் நூற்பவனோ--எந்தத் தொழிலாளியும், பொது அறிவிற் சிறந்தவனா யிருந்தபோதிலும், பள்ளிக்கூடத்தில் படித்துப் பரீக்ஷைகள் தேறி வேலையில்லாமல் திண்டாடும பட்டதாரிகளைவிட உயர்ந்தவனாகக் கருதப்படுவதில்லை. தொழிலாளியும் படிப்பாளியும் ஒரே பொதுவிடத்தில் சந்திக்கும்படியான சௌகரியம் இதுவரை இல்லாமற் போய்விட்டது. பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கும் பையன் புத்தகங்கள் மூலம் அறிவை விருத்திசெய்து கொள்ளுவதற்குத்தான் அவகாச மிருக்கிறது. ஒரு தச்சனிடத்தில் வயிற்றுப் பிழைப்புக்காக வேலை கற்றுக் கொள்ளும் சிறுவனுக்குத் தன் அவயவங்களை விருத்திசெய்து கொள்ளுவதற்குத்தான் முடிகிறது. முன்னவனுக்கு அவயவங்களுக்கு அதிகமாக வேலையில்லை. பின்னவனுக்கு மூளைக்கு அதிகமாக வேலை யில்லை. இந்த இரண்டு காரணங்களும் அவர்

கள் இருவருடைய மனப்பான்மைக்கும் உருக் கொடுத்து விடுகின்றன. தன்னுடைய மூளை வளர்ச் சியே சிறந்த தென்று பள்ளிப் பையன் கிணற்றுத் தவளை மனப்பான்மை கொண்டு விடுகிறான். "பள் ளிக்கூடத்தில் ஏதோ அபார விஷயங்கள் எல்லாம் போதிக்கப்படுகின்றன. அந்தரங்க ரகசியங்களை நாம் ஒருபோதும் தெரிந்துகொள்ள முடியாது. மற்றவர்கள் மூளையால் சம்பாதிக்கும் பணத்தை, நாம் வேலை செய்து பெற்றுப் பிழைக்க வேண்டியது தான்" என்று தொழில் கற்கும் பையன் நினைக் கிறான்.

வேலையில்லாத் திண்டாட்டம் வரும்போது பள்ளியில் படித்த பையனுக்கு மனவருத்தமும், பொருளாதார நெருக்கடியினால் ஊதியம் கிடைக் காதபோது தொழிலாளிக்கு மனக் கசப்பும் ஏற் பட்டு, ஒருவரை யொருவர் சந்தேக மனப்பான்மை யுடன் கருதக் காரண மேற்படுகிறது. இந்தப் பிளவு களினால் சமூகம் முழுவதற்கும் ஏற்படும் தீமையை ஒழித்து, ஒப்பற்ற நன்மையாகிய சமூக ஒற்றுமை யைக் கைத்தொழில் சம்பந்தப்பட்ட கல்வி நிலை நாட்டும். இந்தத் திட்டந்தான், கைத்தொழில் கற்ப வனும் பாடம் கற்பவனும் ஒரே இடத்தில் சந்தித்து, இருவரும் ஒரே பொதுவான கல்வியைக் கற்று, தொழிலுக்கும் அறிவுக்கும் ஒருவித முரண்பாடும் கண்டறிய முடியாத சந்தர்ப்பத்தை அளிக்கிறது.

சமூகத்தைப் பாதிக்கும் இந்த அம்சத்தில் இந்தத் திட்டம் நல்ல வழிகாட்டியாக விளங்குகிறது.

பொருளாதார விஷயத்திலும், இந்தத் திட்டம் கைத்தொழிலாளிகளின் சக்தியை அதிகரித்து, அவர்களுடைய ஓய்வு நேரத்தை லாபகரமாக உபயோகிப்பதற்குச் சாதகமாயிருக்கிறதென்று கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. கைத்தொழில் முறையில் என்னென்ன அபிவிருத்திகள் தேவை என்று ஆராய்ந்து விருத்தி செய்வதற்குப் போதிய படிப்பறிவு தொழிலாளிகளுக்கு இல்லாவிட்டால் கைத்தொழில் முன்னேற்றம் தடைப்பட்டுவிடுகிறது. இதற்குக் காரணம் தொழில் கற்றுக்கொள்வோர் தொழில் முறையை மாத்திரம் அநுபவ பூர்வமாய்க் கற்றுக்கொண்டு அதே முறையைக் கையாண்டு வருவதில் திருப்தி அடைந்து விடுவதுதான். அப்படித் திருப்தி அடையாவிட்டாலும் தேவைக்குச் சரியான விருத்தி செய்வதற்கு வேண்டிய அறிவைப் பெற அவர்களுக்கு அவகாசமோ சந்தர்ப்பமோ இருப்பதில்லை. தங்களுடைய தொழிலை விட்டுவிட்டுப் பள்ளிக்கூடத்தில் போய்ப் படித்து, அறிவு பெற்று, பிறகு தொழில் முன்னேற்ற விஷயத்தை ஆராய்வதற்கு அவர்களால் முடியாது. தங்களுடைய தொழிலுக்குச் சம்பந்தமில்லாத ஒரு படிப்பைப் படித்துக் காலத்தை வீணாக்கவும் அவர்கள் விரும்பமாட்டார்கள். "விருத்திக்கு வேண்டிய அறிவு கிடைக்காமல் போனாலும் போகட்டும்; தெரிந்ததை வைத்

துக்கொண்டு காலங் கழிப்போம்'' என்ற மனப்பான்மை வருவதில் ஆச்சரியமில்லை. இந்த நிலைமையைத் தவிர்த்து, அவர்களுடைய தொழில் பயிற்சியோடு பொது அறிவும் போதித்தால்தான் அவர்களுடைய தொழில் முறைகளை விருத்தி செய்ய அவர்களுக்குச் சந்தர்ப்ப மேற்படும். இத்தகைய சந்தர்ப்பத்தைக் கைத்தொழிலை நடுநாயகமாகக் கொண்ட இத் திட்டம் அளிக்கிறது.

---

## 5. படிப்பும் வாழ்க்கையும்

தற்போதுள்ள ஆரம்பக் கல்வி முறையினல் போதிய பயன் இல்லை யென்பதும், பிள்ளைகளின் காலமும் பெற்ரோரின் பணமும் வியர்த்தமாவதோடு எழுத்தறிவின்மையும் அதிகரிக்கிறது என்பதும் முக்கியமான குறைபாடுகள். நமது மாகாணத்தில் சுமார் அரை லக்ஷம் ஆரம்பக் கல்விப் பள்ளிக் கூடங்க ளிருந்தும் இத்தகைய நிலைமை ஏற்பட்டிருக்கிற தென்பது கொஞ்சம் வியப்பாகவே இருக்கிறது. இந்த மாதிரியாகக் கல்வி போதனை வியர்த்தமாவதற்குப் பல காரணங்கள் உண்டு. முக்கியமாகப் பையன்கள் பள்ளிக்கூடத்திற்குச் சரியாக வருவதில்லை. வருஷம் ஆக ஆகப் பையன்கள் பள்ளிப் படிப்பிலிருந்து முற்றிலும் நின்றுவிடுகிரூர்கள். அதுவரை அவர்களுக்காகச் செலவழித்த பணமும் காலமும் வீணுகப் போய்விடுகின்றன. பையன்கள்

ஏன் பள்ளிக்கூடங்களுக்கு வருவதில்லை? நாளடை வில் அவர்களுடைய எண்ணிக்கை குறைவானேன்?

வீட்டில் குழந்தைகள் உபத்திரவம் பொறுக்க முடியாவிட்டால் பள்ளிக்கூடத்திற்காவது தொலை யட்டும் என்று பெற்றோர் அனுப்பிவிடுகின்றனர். இதனால் ஆரம்பப் பாடசாலைகளில் இளங் குழந்தை களின் எண்ணிக்கை நிர்வாக சாத்தியமின்றி அதி கரித்துவிடுகிற தென்று சென்ற செப்டம்பரில் வெளியிடப்பட்ட உயர்தரக் கல்விச் சீர்திருத்தத் திட் டத்தில் கண்டிருக்கிறது. இம்மாதிரியாகப் பள்ளிக் கூடத்தில் குழந்தைகள் வந்து கூடுவதை உண்மை யில் மக்களுக்குக் கல்வியின் மேலுள்ள ஆசையின் அறிகுறியாகத்தான் கொள்ளவேண்டும். ஆனால் கூடிய சீக்கிரத்தில் இந்த நம்பிக்கைக்கு இடமில்லா மல் போய்விடுகிறது. பாலர் வகுப்பில் வந்து சேரும் பையன்களில் ஒரு சிலரே ஐந்தாம் வகுப்பு வரை யிலும் படித்து எழுத்தறிவு பெறுகிறார்கள். மற்ற வர்கள் பல காரணங்களால் நின்றுவிடுகிறார்கள்.

தான் படிக்கவேண்டிய படிப்பில் பையனுக்கு இயற்கையாக விருப்பம் ஏற்படாமலிருக்கும் நிலை மையைப் பற்றிய காரணம் முன்னே குறிப்பிடப் பட்டிருக்கிறது. தான் படிக்கும் பாடத்துக்கும் தன் வாழ்க்கையில் அநுபவிக்கும் விஷயங்களுக் கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது என்பதைப் பையன் அறியும் முறையில் வாழ்க்கைக்குச் சாதன

மான ஒரு தொழிலுடன் போதனையை இணைக்க இத் திட்டம் முற்படுகிறது.

தவிர, பையன்கள் பள்ளிக்கூடத்தை விட்டு நீங்குவதற்கு இதைவிட முக்கிய காரணம் ஒன்றுக்கும் இந்தக் கைத்தொழில் பூர்வமான திட்டம் பரிகாரம் தேடுகிறது. ஒரு ஏழைத் தொழிலாளி தன் சிறுபையனைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புகிறான். பையன் படித்துப் பரீக்ஷைகள் தேறவேண்டும் என்ற ஆசை அத் தொழிலாளிக்கு இல்லாம லிருக்கலாம். அப்படி இருந்தாலும், அந்த ஆசையைப் பூர்த்தி செய்யப் போதிய பொருள் அவனிடம் இல்லாம லிருக்கலாம். எப்படியும் தன் வேலைக்கு இடையூறாகவும், தனக்கு ஓர் கவலைக் கிடமாகவும் இருக்கும் பையனைப் பள்ளிக்கூடத்தின் பாதுகாப்புக்கு அனுப்பிவிடுகிறான். சிறுவன் தன் தகப்பனுருக்குத் தொழிலில் உதவி செய்யக்கூடிய வயதையும் அநுபவத்தையும் இன்னும் அடையவில்லை. ஆனல் பள்ளிக்கூடம் சேர்ந்த இரண்டு மூன்று வருஷங்களில் அந்த அநுபவத்தைப் பெற்றுவிடுகிறான். அப்படி அநுபவ மில்லாவிட்டாலும், பையன் பெரியவனகி, இனிமேல் தன் பெற்றோருக்குக் கவலைக்கிடமா யிராமல் சிறு விஷயங்களில் உதவிசெய்யக் கூடியவன யிருக்கிறான். ஒன்று மில்லாவிட்டாலும் தொழிற்சாலையிலோ, வயலிலோ வேலை செய்யும் தன் தகப்பனுக்குச் சாப்பாடாவது கொண்டுபோக முடியும். இப்படிப்பட்ட

குடும்ப உதவி செய்யக்கூடிய பையனை வேறு காரணமின்றித் தகப்பன் பள்ளியிலிருந்து நிறுத்தி விடுகிறான். ஆரம்பக் கல்வி இலவசமாகப் போதிக்கப்பட்டால்கூட, தன் பையன் தன்னோடிருந்து இன்னும் அதிக லாபகரமான வேலைகளைக் கற்றுக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கை தகப்பனுக்கு இருக்கிறது. உயர்தரப் படிப்புக்கு அனுப்பச் சக்தியில்லாத தகப்பனுக்கு, ஏதோ சிறிது எழுதப் படிக்க மாத்திரம் தெரிந்துகொள்வதற்காக, தன் பையன் காலை முதல் மாலை வரை பள்ளிக்கூடத்தில் காலம் கழிப்பதில் விருப்பம் இல்லை. ஆரம்பக் கல்வி மூலம் அவன் சிறிது எழுத்தறிவு அடைவதை விடத் தன்னோடு இருந்து தொழிலைக் கற்றுக்கொள்ளுவதுதான் நல்லது என்று தகப்பன் கருதுவதில் சிறிதும் தப்பில்லை. பள்ளிக்கூடத்திற்குப் போவதை நிறுத்திய பையன், நாளடைவில் தான் முதல் இரண்டு மூன்று வருஷங்களில் கற்ற கல்வியை மேலும் மேலும் விருத்தி செய்துகொள்வதற்குச் சாதனமின்றி, மறந்துவிடுகிறான். முடிவில் அரை லக்ஷம் பள்ளிக்கூடங்களினால் எழுத்தறிவின்மை நீங்காமல் வியர்த்தம் ஏற்படுவதில் என்ன ஆச்சரியமிருக்கிறது?

அந்த ஏழைத் தகப்பனுக்குப் பையன் படிக்கும் பாடங்களில் நம்பிக்கை உண்டாகுமாறு செய்தாலொழிய அவன் பையனை நீடித்துப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதை எதிர்பார்க்க முடியாது. அப்

2

படிப்பட்ட நம்பிக்கை ஏற்படுவதற்கு, பையன் வாழ்க்கைக்குப் பயனற்ற பாடங்களை மாத்திரம் படிக்கவில்லை, தன்னுடைய வாழ்க்கைக்கு நெருங்கிய சம்பந்தம் கொண்ட ஒரு தொழிலோடு இணைக்கப்பட்ட பாடங்களைக் கற்றுக்கொள்ளுகிறான் என்று தகப்பன் அறியும்படி செய்யவேண்டும். தன்னுடைய மகன் தன்னோடிருந்து கற்றுக்கொள்ளட்டும் என்று தகப்பன் நினைத்த அதே தொழிலைப் பையன் இன்னும் சிறந்த முறையில் பள்ளிக்கூடத்தில் கற்பதோடு எழுத்தறிவும் பெறுகிறான் என்று தகப்பனுக்கு எடுத்துக் காட்டினால் இந்தச் சந்தேகமும் பிற்போக்கு நிலையும் இருக்காது. அந்த வேலையைத்தான் இந்தக் கைத்தொழில் பூர்வமான திட்டம் செய்ய முன்வந்திருக்கிறது. வார்தா பள்ளிக்கூடங்களில் படிக்கும் பிள்ளைகளின் தந்தையர் — குடியானவர்கள், தொழிலாளர்கள் — யாராயிருந்தாலும், தங்களுடைய மக்கள் எழுத்தறிவோடு தொழிற் பயிற்சியும் பெறுகிறார்கள், எழுத்தறிவு பெற்று வெளியேறும் போது தங்களுக்கு நல்ல உதவி செய்யத் தயாராயிருப்பார்கள் என்ற உண்மையைத் தெரிந்து கொள்வார்கள்.

## 6. தொழிலில் திறமை அறிவில் பெருமை

வெறுங் கைத்தொழிலை மட்டும் இந்தக் கல்வித் திட்டம் போதிக்குமானல் பையன் பள்ளிக்கூடம் வருவது அனுவசியமாய்ப் போய்விடும். திட்டத்தில் கண்டபடி போதிக்க வேண்டிய கைத்தொழில் கல்வி கற்பிக்கப்பட வேண்டிய சாதனங்களை உடையதா யிருக்கவேண்டும். மனித வாழ்க்கையின் நடவடிக்கைகளுக்குப் பொருத்தமான கைத்தொழில்கள் மூலம்தான் இந்த நோக்கத்தைப் பூர்த்தி செய்ய முடியும். இதை உணர்ந்துதான் வார்தா கமிட்டியார், இத் திட்டத்தின் நோக்கம் வெறுந் தொழிலாளிகளை உற்பத்திசெய்வது அன்று என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். திட்டத்தின் நோக்கம், ஒரு தொழிலின் முறையை ஆராய்ந்து, அம் முறையை இன்னும் எந்த விதத்தில் சீர்திருத்தித் தொழிலை விருத்தி செய்யலாம் என்பதே யன்றி, வரிசை வரிசையாய்ப் பையன்களை உட்கார வைத்து யந்திரங்கள் போல் ஒரே முறையைக் கையாளச் செய்வதன்று. தொழிலைச் செய்யக் கற்றுக்கொள்ளும் பையன் எப்படிச் செய்வது என்பதைப் பயில்வது மட்டு மன்றி, ஏன் ஒரு குறிப்பிட்ட முறையைக் கையாளவேண்டு மென்பதையுந் தெரிந்துகொள்ள வேண்டும். இந்தச் சாதனம் இல்லாவிட்டால் தொழிலைப் பள்ளிக்கூடத்தில் கற்பிப்பதில் ஒரு விதச் சிறப்பும் கிடையாது.

கைத்தொழிலைக் கல்வித் திட்டத்தின் நடுநாயக மாக வைத்ததின் முக்கிய நோக்கம், அதன் நுணுக் கங்களைப் பையன் அறிந்து, தன்னுடைய மூளையின் வளர்ச்சியை அந்தத் தொழிலின் வளர்ச்சிக்கு வேண்டியவாறு உபயோகித்து, மூளை வளர்ச்சியை யும் அவயவ வளர்ச்சியையும் இணைப்பதுதான். பாடத் திட்டத்தோடு ஒரு தொழில் முறையையும் சேர்த்துவிட்டு, அதையும் வழக்கம்போலப் போதிக் கும் முறையில் வார்தா கமிட்டிக்குச் சிறிதும் நம் பிக்கை யில்லை. அநுபவத்திலும், கவனத்தினு லும், ஒத்துழைப்பினுலும், உற்சாகத்தினுலும், பையன் தொழில் முறையின் நுணுக்கங்களைக் கற் கச் சாதனம் இருக்கவேண்டுமென்பதே திட்டத் தின் முக்கியமான கவலை.

சமூக வாழ்வில் ஒவ்வொரு மனிதனும் தன்னு லான சேவையைச் செய்து சமூகம் தனக்குக் கொடுக் கும் பாதுகாப்புக்குப் பாத்திரமாகவேண்டும். ஜன நாயகக் கொள்கைகள் வேரூன்றி வரும் இச் சமயத் தில் நமது சமூக முன்னேற்றத்திற்குத் தேவையான விஷயங்களை எல்லாத் துறைகளிலும் அறிந்து நடத்துவதற்கு ஒரு புது முறைக் கல்வி அவ சியமாகிறது. படித்து அறிந்த மனிதன் சமூக வாழ்க்கையில் ஈடுபட்டுப் பொதுஜன சேவை செய் வதற்கு வேண்டிய தாராள மனப்பான்மையை இந் தத் திட்டம் வளரச் செய்யும். ஏனெனில், இந்தத் திட் டத்தின் மூலம் எவ்வித வேலையும் ஒரு சமநிலையை

அடைகிறது. சில குறிப்பிட்ட வேலைகள் தான் ஒரு வருடைய அந்தஸ்துக்குப் பொருந்தும், மற்றவை கீழ்த்தரமானவை என்ற மனப்பான்மையை ஒழித்து, எந்தத் தொழிலையும் ஒரே மனப்பான்மை யுடன் கருதுவதையே திட்டம் வற்புறுத்துகிறது. இதற்காகத்தான் பாடத் திட்டம் முழுவதும் ஒரு தொழிலை யொட்டி வகுக்கப்படவேண்டு மென்பது அவசியமாகிறது. கல்வியில் தொழிற் பயிற்சியும் ஒரு முக்கிய அம்சம். தொழில் தனிக் கல்வி அன்று. ஒன்றுக் கொன்று உயர்வு தாழ்வு கொண்டவை யல்ல. ஒரு சமூகத்தில் தன் மூளை மூலமாகவோ கை கால்கள் மூலமாகவோ சேவை செய்கிறவர்கள் எல் லோரும் சம அந்தஸ்துடைய சமூக அங்கத்தினர்கள் என்ற உண்மையைத்தான் கமிட்டி தன் உட்கருத் தாகக் கொண்டிருக்கிறது.

மனமும் காயமும் லயித்த இந்த உணர்ச்சியைப் பள்ளிக்கூடத்தில் கிரகித்த பிள்ளைகள், பிற்காலத் தில் பொது வாழ்விலும் தங்களுடன் கொண்டு செல் லும்போது ஒவ்வொருவனுடைய உண்மைச் சக்தி யையும் நன்ருய் அறிந்து ஒத்துழைக்க இட மேற்படு கிறது. கூட்டுறவு வாழ்க்கையைப் பிரதானமாகக் கொண்ட ஒரு சமூகத்தில் அங்கத்தினர்கள் முக்கிய மாகப் பொதுஜன சேவை செய்துதான் வாழவேண் டும். சமூகச் சேவையே கூட்டுறவு வாழ்க்கையின் அடிப்படையாகிறது. இந்த மனப்பான்மை வெறும்

பேச்சினால் திடீரென்று வந்துவிடாது. பழக்க வழக்கங்கள் வேரூன்றும் இளம்பிராயத்திலேயே இப்படிப்பட்ட சேவை மனப்பான்மை வளர்வதற்குரிய சாதனங்கள் இருக்கவேண்டும். "இளமையிற் கல்" என்ற உபதேசம் இந்த விஷயத்தில் நிரம்பவும் அவசியமானது. குழந்தைகள் மனதில் வீண் சந்தேகமும், தப்பெண்ணங்களும், சம்பிரதாய ஆதிக்கமும் குடிபுகு முன் சேவை மனப்பான்மை வளர வேண்டுமென்றால், ஒரு சமூகத்தில் எந்த விதத்தில் சேவை செய்தாலும், அப்படிச் செய்பவன் எப்படிப்பட்ட தொழிலாளியானாலும் சமூகத்தில் சம அந்தஸ்து வகிக்க உரிமையுடையவன் என்ற கருத்துப் பதிய வேண்டும். சில குறிப்பிட்ட தொழில்களைச் செய்யும் ஒரு வகுப்பினரை நாம் அந்தத் தொழில்களைப்பற்றிய ஒருவிதத் தப்பெண்ணத்தால் ஒதுக்கி வைத்திருந்த பாவத்துக்காக மகாத்மாவின் உயிரையே பறிகொடுக்க விருந்தோம். அதே மகாத்மாவின் உற்சாகத்தினால், நமக்குப் பின் வரும் சந்ததியாவது இத்தகைய தப்பெண்ணங்களைக் கொள்ளாமல், மனிதர்களின் சமூக அந்தஸ்தைப் புதுத் தராசில் நிறுத்து ஒரே அளவாகக் காணட்டும் என்று இத் திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது. "படித்தவன் இந்த வேலையைச் செய்யக் கூடாது; படிக்காதவன் செய்யவேண்டிய வேலை இது" என்ற அர்த்தமில்லாத பேச்சுக்களுக்கு வார்தா திட்டத்தின் மூலம் கல்வி கற்ற பையன் செவி சாய்க்க மாட்

டான். அவனுக்குத் தொழிலோடு இணைக்கப்படாத கல்வியினால் ஒரு பயனுமில்லை. கைத்தொழில் பூர்வமாய்ப் போதிக்கப்படும் கல்விதான் சமூகத்தில் அவன் தனக் குரிய ஸ்தானத்தை வகிக்க உதவி செய்யும்.

---

## 7. பள்ளிச் செலவும் பையன் வேலையும்

இத்தகைய கோட்பாடுகளைக் கொண்டுதான் வார்தா திட்டம் தயாரித்தவர்கள் தாங்கள் வகுத்த பாடத் திட்டத்திற்கு ஒரு கைத்தொழில் போதனையை அடிப்படையான அம்சமாக நிர்ணயித்தார்கள். இருந்த போதிலும், கல்வி விஷயங்களில் அநுபவம் வாய்ந்தவர்களிட மிருந்தே வந்த ஆக்ஷேபணைகளுக்குக் குறைவில்லை. நாட்டில் கைத்தொழிலே நசித்துப் போய்விடு மென்றனர் சிலர். தொழிலாளிக ளிடையிலேயே வேலையின்மை தாண்டவமாடும் போது இந்தத் திட்டப்படி கற்றவர்களுக்கு எங்கிருந்து வேலை கிடைக்கும் என்று சிலர் கேட்டனர். கல்வியைக் குட்டிச் சுவராக்கி, வெறுந் தொழிலாளிகளை உற்பத்திசெய்து பொதுவுடைமைக்கு அடிகோலுகிறார்கள் என்றும் சிலர் பயந்தனர். ஆனால் இந்த ஆக்ஷேபணைகளுக்கெல்லாம் முக்கிய காரணம் இந்தக் கோட்பாடுகளைச் சரியாக அறியாதது மட்டுமன்று. பாடத் திட்டத்தில் கைத்தொழில் போதனைக்கு ஒதுக்கி வைக்கப்பட்ட கால அளவு அபரிமிதமானது என்ற எண்ணமும், பள்

ளிப் பையன்களுடைய கைத்தொழிலால்தான் உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் கிடைக்குமென்று எண்ணமுந்தான். இந்த ஆக்ஷேபணைகளைப் பாடத் திட்டத்தின் முக்கிய அம்சங்களைக் கவனிக்கும்போது ஆராய்வோம்.

அங்கங்கே தனிப்பட்ட கல்வி நிபுணர்கள் இத் திட்டத்தைப் பற்றிய தமது கருத்தை வெளியிட்டுச் சில அம்சங்களை வெகுவாகக்கண்டித்திருக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் சென்னை ஆசிரியர் சங்கம் இந்தத் திட்டத்தை ஆராய்ந்து விடுத்த அறிக்கை கவனிக்கத் தக்கது. இத் திட்டத்தை ஆராய்ந்த கமிட்டியில் கல்வி விஷயங்களில் நேராக ஈடுபட்ட நிபுணர்களும், தேசியவாதிகளும் கலந்துகொண்டனர்.

“அடிப்படையான ஒரு கைத்தொழில் மூலம் கல்வி போதிப்பதைக் கையாளுவதை நாங்கள் தயக்கமின்றி ஆதரிக்கிறோம்” என்று சொல்லி இக் கமிட்டியார் தொழிலுக்கும் அறிவுக்கும் வேறுபாடாவது வித்தியாசமாவது இருக்க முடியாதென்பதைக் குறிப்பிடுகின்றனர்.

பாடத் திட்ட விஷயமாக இக்கமிட்டியார் மாறுதல்கள் செய்யவேண்டிய சில தேவைகளைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவைகளைக் கவனிப்பதற்கு முன் முக்கியமாக ஆசிரியர்களால் பலமாக ஆக்ஷேபிக்கப்பட்ட விஷய மொன்றை இங்கே குறிப்

பிடுதல் அவசியம். அதுதான் இத் திட்டம் தன்னுடைய செலவுக்குத் தானே பணம் சம்பாதிக்கவேண்டியதென்பது. பையன்கள் கற்றுக்கொள்ளும் கைத்தொழில் மூலம் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்று, அந்தப் பணத்திலிருந்து ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கலாம் என்பதை வார்தா திட்டக் கமிட்டியார் புள்ளி விவரங்கள் மூலம் காண்பித்திருந்தனர். இதன் பிரகாரம் ஆசிரியர்களுக்கு ரூ. 25 சம்பளம் என்று நிர்ணயித்திருந்தார்கள்.

ரூ. 25 சம்பளம் மிகக் குறைவானதென்பதை மாத்திரம் குறிப்பிடாமல், சிலர் இத் திட்டம் தன் செலவுக்குத் தானே பணம் சம்பாதிக்கும் முயற்சியைத் தீவிரமாகக் கண்டிக்க முன்வந்தனர். கல்வி ஒரு நாளும் செலவுக்குச் சரியான வருமானத்தைச் சம்பாதிக்கக் கூடியதாயிருக்க முடியாது என்று சிலர் வாதித்தனர். ஆசிரியர்கள் தங்கள் சம்பளத்திற்காகப் பையன்களைக் கைத்தொழில் வேலையில் கொடுமையாக நடத்துவார்கள் என்றும் சிலர் கூறினர்.

“வார்தா மகாநாட்டில் நிறுவப்பட்ட ஆரம்பக் கல்வி நிரம்பவும் சிறந்ததென்று நாங்கள் கருதுகிறோம். அது செலவுக்கேற்ற பணம் சம்பாதிக்க முடியாவிட்டாலும், நல்ல கல்வி முறையை உத்தேசித்தும், தேசீய முன்னேற்றத்தை உத்தேசித்தும் அதைக் கையாளவேண்டும்.

"இந்தத் திட்டம் நடைமுறையில் வரும்போது கலாசாரக் கல்வி அம்சங்கள் மறக்கப்பட்டுப் பொருளாதார அம்சத்துக்கே விசேஷ கவனம் செலுத்தும்படியான அபாயம் ஒன்றிருக்கிறது............... பிள்ளைகளிடம் அதிகமாக வேலை வாங்குவதில் ஆசிரியர்கள் தங்களுடைய கவனத்தைச் செலுத்திவிடலாம்...............இந்த விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்கவேண்டியது அவசியம்...........ஆசிரியர்களுக்குப் பயிற்சி யளிக்கும் போதும், மேற்பார்வை வேலை கொடுக்கும் போதும் இந்த விஷயத்தை எப்பொழுதும் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்."

முன்னெச்சரிக்கையாக வார்தா கமிட்டியார் தங்கள் திட்டத்தில் மேற்கண்டபடி கூறியிருக்கும் சிலர் ஆக்ஷேபித்து வாதிப்பதுதான் விந்தையாக இருக்கிறது. இந்த விஷயத்தைப் பலர் சரிவர உணரவில்லையென்பதற்காக ஜாகிர் ஹுசேன் கமிட்டியார் மகாத்மாவுக்கு எழுதிய இரண்டாவது கடிதத்தில் பல ஆக்ஷேபனைகளுக்கும் சமாதானம் சொல்லும்போது இதையும் விளக்கி யிருக்கிறார்கள்.

---

## 8 ஆசிரியர்கள் சம்பளம்

"பையன்கள் தயார் செய்யும் பொருள்களுக்கும் ஆசிரியர்கள் சம்பளத்திற்கும் நேரடியான சம்பந்தம் ஒன்றுமில்லை என்பதைத் தெளிவுறுத்த விரும்புகிறோம். ஆசிரியர்களுக்குச் சர்க்கார் பொக்

கிஷத்திலிருந்து சம்பளம் கொடுக்கப்படும்.......'' என்று வார்தா கமிட்டியார் விளக்கியிருப்பது இத்தகைய அவசர ஆக்ஷேபனைகளுக்குத் தக்க சமாதானமாகும்.

சென்னை ஆசிரியர் சங்கக் கமிட்டி இப்படிப் பட்ட ஆக்ஷேபனைகளைக் கிளப்பாமல் சம்பளத்தின் குறைவைப் பற்றி நியாயமான குறைபாடாகக் குறிப்பிட்டிருப்பதை ஆசிரியர்கள் எல்லோரும் வரவேற்பார்கள். ஆனால் கல்வித் திட்டம் ஒரு பொதுச் சேவை மனப்பான்மையில் நடத்தப்படவேண்டும் என்ற கொள்கையினால் இப்படிப்பட்ட சம்பளம் விதிக்கப்பட் டிருக்கிற தென்று நினைக்க வேண்டியிருக்கிறது. சேவை செய்யவேண்டும் என்ற அவாவினால் வரும் ஆசிரியர்களைப் பற்றி இந்தக் கல்வித் திட்டத்தின் கீழ் கவலையில்லை. ஆசிரியத் தொழிலினால் ஜீவிக்கும் லக்ஷக் கணக்கானவர்களை நினைக்கும்போது இந்தச் சம்பளம் போதுமா என்பது ஒரு முக்கிய பிரச்னைதான். சென்னை ஆசிரியர் சங்கம் சொல்வதுபோல் இத் திட்டத்தை நடைமுறையில் கொண்டுவரச் சரியான திறமை யுடையவர்கள் முன்வர வேண்டுமானால் நல்ல முறையில் சம்பள விகிதம் நிர்ணயிப்பது அவசியமாகிறது. சேவை மனப்பான்மை இருந்தபோதிலும், இந்தத் திட்டத்தை நடத்தும் ஆசிரியர்கள் பொதுக் கல்வியோடு விசேஷப் பயிற்சியும் பெறவேண்டியதன் அவசியத்தைக் கவனிக்கும்போது சம்பள விகிதம் இவர்க

ளுடைய திறமைக்கும் உழைப்புக்கும் தகுந்ததாய் உயர்த்தப்பட வேண்டுமென்பது அவசியமே.

இத்தகைய பள்ளிக்கூடத்தில் தயார் செய்யப் படும் பொருள்களை யார் வாங்குவது, ஊரில் தொழி லாளர்கள் தயார் செய்யும் பொருள்களைத்தானே ஜனங்கள் வாங்குவார்கள் என்று சிலரிடை ஒரு சந் தேகம் கிளம்பிற்று. இந்தச் சந்தேகத்தை மகாத்மா காந்தியே வார்தா கல்வி மகாநாட்டில் தீர்த்துவைத் தார். பள்ளிக்கூடங்களில் தயார் செய்யப்படும் பொருள்களை வாங்கிக்கொள்ளும் பொறுப்பு முழு வதும் சர்க்காரைச் சேர்ந்தது என்று அவர் சொல் லியதைக் குறிப்பிட்டு ஜாகிர் ஹுசேன் கமிட்டி யார் தங்களுடைய பதிலில் விளக்கியிருக்கிறார்கள். இக் கமிட்டியார் கல்வி சம்பந்தமான திட்டத்தைத் தயாரிப்பதே முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்த படியால் அதன் சம்பந்தமான அரசியல் நிர்வாக விஷயங்களைப் பாதிக்கும் ஒரு பொருள் விற்பனை ஸ்தாபனம் ஏற்படுத்துவதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. வார்தா பள்ளிக்கூடங்களில் தயா ரிக்கப்படும் பொருள்களை விற்கும் முறை, வாங் கும் முறை முதலியவற்றைச் சர்க்காரின் இலாகா ஒன்றே கவனிக்கவேண்டும். பொருள்களை வாங் கும் பொறுப்பு சர்க்காரைச் சேர்ந்திருப்பத ளுல் அதற்கு வேண்டிய ஸ்தாபனத்தையும் சர்க் கார் ஏற்படுத்தவேண்டியதுதான்.

"இந்தப் பொருள் விற்பனையால் வரும் பணம் ஆசிரியர் சம்பளங்களுக்குப் போதியதாக இருக்

குமா ?" என்று 'ஹிந்து' பத்திரிகை சந்தேகப்படு கிறது. வார்தா கமிட்டியார் நூல் நூற்றல் செய்தல் தொழிலை அடிப்படையாகக் கொண்ட அகில இந்திய நூற்போர் சங்கப் புள்ளி விவரங்களை ஆதார மாகக் கொண்டு தயாரித்த புள்ளி விவரங்களில் ஆசிரியர்களுக்கு ரூ. 25 சம்பளம் கிடைக்குமென்று நிர்ணயித்திருக்கிறார்கள். ஆசிரியர்களின் சம்பளங் கள் உயர்த்தப்படவேண்டும் என்ற கருத்தை உத் தேசிக்கும் போது இந்த நிர்ணயம் மாற்றப்பட வேண்டி வரும், அல்லது சம்பளத்திற்கு இந்த விற் பனை வருமானம் தவிர வேறு பண உதவி ஏற்பாடு செய்யவேண்டி நேரிடும்.

தவிர, ஸ்தல நிலைமைகளை உத்தேசித்து அடிப் படையான கைத்தொழில் நூல் நூற்ப தல்லாமல் வேறாக இருந்தால் அப்பொழுது இதே புள்ளி விவ ரங்கள் உபயோகப்படமாட்டா. சென்னை ஆசிரிய சங்கத்தார் வார்தா திட்டத்தைப் பற்றிச் செய் துள்ள சிபார்சுகளில் ஒரே ஒரு கைத்தொழில் கல்வி முன்னேற்றத்துக்குப் போதாது, பல வித மான கைத்தொழில்கள் நானாவிதமான அனுபவத் திற்கு இடங் கொடுக்கவேண்டும் என்று சொல்லி யிருக்கிறார்கள். இந்த விஷயங்களை ஆராயும்போது தயார் செய்யப்பட்ட பொருள்களின் விற்பனை வரு மானம் ஒவ்வொரு கைத்தொழிலுக்கும் வித்தியா சப்பட்டே தீரும் என்று தெரியும். ஆகவே, இந்த வருமானம் எல்லா நிலைமையிலும் ஆசிரியர்களின்

சம்பளங்களுக்குப் போதுமானதா யிருக்குமா என் பது அநுபவ பூர்வமாய் ஆராயப்பட வேண்டிய விஷயம். ஆயினும், திட்டம் அமுலுக்கு வருவதை இந்தச் சந்தேகம் பாதிக்க வேண்டிய நியாயமில்லை. கல்வியின் செலவு வருமானத்திற்கு உட்பட்டிருக்க வேண்டும் என்பது ஒரு நல்ல முறையாகப் பிர ரேபிக்கப்பட்டதே யன்றி, நிலைமையை அறியாமல் கண்மூடித்தனமாய்ச் சொல்லப்படவில்லை. சென்னை காங்கிரஸ் தீர்மானத்தில் இந்த வரவு செலவு சரிக் கட்டும் விஷயம் காணப்படாதது கண்டு சென்னை ஆசிரியர் திருப்தி யடைந்திருப்பது முக்கியமாய்க் கவனிக்கத் தக்கதாகும். வரவைவிடச் செலவு, அதிகப்படாம லிருக்கவேண்டு மென்ற ஒரே விஷ யத்தை வைத்துக்கொண்டு வார்தா திட்டம் முழு வதையும் ஆக்ஷேபிப்பதற்கு ஆதாரமே யில்லை.

---

## 9. வாழ்க்கையின் பயிற்சி ஸ்தலம்

இந்தத் திட்டம் கைத்தொழில் முன்னேற்றத் துக்கு முரண்பட்டதாக இருக்கிறது; தற்கால வாழ்க்கைக்குப் பயன்படாத அநாகரிக சமூக நிலை க்கு நம்மைத் திரும்பவும் கொண்டு செல்கிறது என்ற வாதத்திற்கு இக் கமிட்டியின் இரண்டாவது அறிக்கை தக்க பதில் அளித்திருக்கிறது. கைத் தொழில் மூலம் கல்வி போதிப்பது மனோதத்துவ பூர்வமாக ஒரு சிறந்த முறை என்பதைக் கொண்டு தான் இத் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இப்

போ திருக்குங் கல்வி முறையைவிட, கைத்தொழில் பூர்வமான கல்வி பிற்கால வாழ்க்கைக்கு முரண் பட்டதல்ல என்பதை எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். வார்தா திட்டக் கல்வி மூலமாகவாவது எழுத்தறிவு பெற்ற பையன் கைத்தொழிலின் மேன்மையையும் நன்மையையும் உணர்ந்து நல்ல மனப்பான்மை யுடன் தொழிலில் ஈடுபடுகிறான். தற்போதைய புத் தகபூர்வமான கல்விபயின்றவனுக்குக்கைத்தொழில் வாழ்க்கையில் அநுதாபமோ சிரத்தையோ சிறிதும் ஏற்படாது. வார்தா பள்ளிக்கூடத்திற்கும் பொது ஜனத் தொழில்களுக்கும் வியாபாரப் போட்டி ஏற் பட்டுவிடும் என்ற தப்பெண்ணத்தோடு சிலர் கைத் தொழில்கள் எல்லாம் அழிந்து போய்விடும் என்ற ஆக்ஷேபணையைக் கிளப்புகிறார்கள். சுயராஜ்யம் வந்துவிட்டால் போலீஸ், கோர்ட்டு ஒன்றுமே இருக் காது; கொள்ளையும் கொலையுந்தான் அதிகரிக்கும் என்று சொல்லிய பாட்டிகளின் வாதத்தைப்போ லிருக்கிறது இந்த ஆக்ஷேபணை. கிராமக் கைத் தொழில்களுக்கும் வார்தா பள்ளிக்கூடத்தின் கைத் தொழிலுக்கும் ஒருவித சம்பந்தமும் இருக்கவேண் டிய அவசியமில்லை என்று கமிட்டியார் வற்புறுத்து கிறார்கள். இத் திட்டத்தின் அடிப்படையாக கைத் தொழிலைக் கொண்டது கல்விக்கு ஒரு உபயோககர மான சாதனமேயன்றி, கைத்தொழில் மாத்திரம் போதிக்கும் நோக்கத்தினு லல்ல என்பதை இப்படி ஆக்ஷேபிப்பவர்கள் மறந்து விடுகிறார்கள். வெறும் புத்தகபூர்வமான,உபயோகமற்றகல்வியை ஒழித்து,

பையனின் சுற்றுணர்ச்சிக்கும் தினசரி வாழ்க்கைக்கும் பொருத்தமான கல்வித் திட்டத்தைத் தயாரிப்பதற்காகத்தான் கைத்தொழிலை இத் திட்டத்தின் நடு நாயகமாகக் கொள்ளப்பட்டதென்று திட்டத்தின் அம்சங்களை விளக்கும்போது சொல்லியிருப்பதை, இந்த ஆக்ஷேபங்களை யோசிக்கும்போது, மனதில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். 'ஹிந்து' பத்திரிகை சொல்வது போல், கைத்தொழில் வாழ்க்கைக்கு இத் திட்டக் கல்வியை ஒரு பயிற்சிச் சாதனமாகவே கொள்ளலாம். கைத்தொழில்களுக்குப் போட்டியாக இருப்பதன்றி, இத் திட்டம் கைத்தொழில் முன்னேற்றத்திற்கு முக்கிய சாதனமான பயிற்சியை அளித்து உதவும்.

அப்படிப்பட்ட பயிற்சியை வெறும் தொழிற் கல்விப் பள்ளிக்கூடங்களில் அளிக்கக்கூடாதா என்று கேட்கலாம். தொழிற் கல்விக்காகத் தனிப் பள்ளிக்கூடங்கள் அமைப்பது வேறு விஷயம். அந்தப் பள்ளிக்கூடங்களில் தொழிற் பயிற்சியின் அடிப்படையான முறைகளைத் தெரிந்துகொண்டவர்கள்தான் சேர முடியும். வார்தா திட்டம் ஆராய மேற்கொண்டது அடிப்படையான ஆரம்பக் கல்வியே யன்றி, தொழில் அல்லது உயர்தரக் கல்வி அல்ல. ஆரம்பக் கல்விக்குப் பிறகுதான் இவ்வைகள் ஆராயப்பட வேண்டும். இம்மாதிரித் தனித் தொழிற் கல்விப் பள்ளிக்கூடங்களைப்பற்றி பட்வுட் அறிக்கை விரிவாகக் கூறியிருக்கிறது. வெறும் புத்

தகப் படிப்பினால் பையனுக்குப் பிரயோசன மில்லை; வாழ்க்கைக்கு உபயோகப்படக்கூடிய ஒரு தொழிலை யும் அவன் கற்றுக்கொள்ள வேண்டும் என்பது இத் திட்டத்தின் முக்கிய நோக்கம். இந்த நோக்கத் தில், தொழிலைக் கற்றுக்கொள்ளும்போதே பையன் அறிவும் அடையவேண்டும் என்னும் கருத்து அடங்கியிருக்கிறது. கலைகளைப் பகைப் புலமாக வைத் துப் போதிக்கப்படும் தொழிலை அடிப்படையாகக் கொண்ட இக் கல்வியினால் நம்முடைய சமூகத்தில் படிப்பறிவு கொண்ட தச்சர், விவசாயிகள் முதலி யோர் தோன்றுவார்கள் என்று கல்வி மந்திரியின் பார்லிமெண்டரி காரியதரிசி ஆசிரியர் வார்க்கி கூறி யிருப்பது இங்கே கவனிக்கத் தக்கது.

வாழ்க்கைக்கு நெருங்கிய சம்பந்தமுள்ள தொழில் சிறிதும் தெரியாத பட்டதாரிகளும், சந் தர்ப்ப மில்லாததால் படிப்பறிவு பெறாத தொழி லாளர்களும் தற்சமயம் அதிகமாய் இருப்பதால் சமூகத்தில் படித்தவனுக்கும் தொழிலாளிக்கும் ஒரு இயற்கைத் தொடர்பு இல்லாமல் போய்விடுகிறது. அத் தொடர்பை ஏற்படுத்தி இவ் விரண்டு விதத் திறமையையும் ஒருவனிடத்திலேயே இணைப்பது தான் வார்தா திட்டத்தின் விசேஷம். காகா கலேல்கார் குறிப்பிட்டபடி இந்த இணைப்பின் பயனாக இத் திட்டத்தின் மூலம் கல்வி கற்ற சமூகத்தில் வகுப்பு வித்தியாசங்கள் இல்லாமல் போய்விடும். வகுப்பு

வித்தியாச மனப்பான்மை ஏற்படுவதற்கு இத் திட்டத்தில் சந்தர்ப்பமில்லை.

---

## 10. மூன்றுவித இணைப்பு

இம்மாதிரி பையன் கற்றுக்கொள்ளும் கைத்தொழிலையும் படிப்பறிவையும் ஒன்றாக இணைப்பதற்காக இத் திட்டம் மூன்று அம்சங்களை ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. அவை பையனின் சுற்றுப்புற அநுபவம், பையன் வாழும் சமூக சம்பந்தமான விஷயங்கள், பையன் கற்றுக்கொள்ளும் கைத்தொழில். பாடத் திட்டத்தை இந்த மூன்று அம்சங்களின் மூலமாக அமைப்பதால் பையனின் வாழ்க்கைக்கு நெருங்கிய கல்வியை அவனுக்கு அளிக்க முடிகிறது. கமிட்டியின் பாடத் திட்டத்தைக் கவனித்தால் இந்தச் சம்பந்தமும் இணைப்பும் நன்றாகத் தெரியவரும். பாடத் திட்டம் முழுவதிலும் ஏழு வருஷ காலத்திற்குள் போதிக்கப்பட வேண்டிய கல்வியினால் சித்தியாக வேண்டிய நோக்கங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பாடமும் எப்படி அடிப்படையான கைத்தொழிலோடு இணைக்கப்பட வேண்டும் என்பதை ஆராய்ந்தால் இத் திட்டத்திற்கும் பையனுடைய தினசரி வாழ்க்கைக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தம் தெரியும். கல்வியும் கற்கும் கைத்தொழிலும் ஒன்றோடொன்று லயித்துச் சிறிதும் வித்தியாசமின்றி இருக்கவேண்டுமென்பதே, திட்டம் பையனின்

வாழ்க்கையையே முக்கியமாகக் கொண்டிருக்கிறது என்பதைக் காண்பிக்கும். வார்தா கமிட்டியின் முதல் அறிக்கையைப் பார்த்தவுடனேயே சில கல்வி நிபுணர்கள், "இத் திட்டம் கைத்தொழிலையே முக்கியமாகக் கொண்டிருக்கிறது; கல்வி கற்கும் பையனைப் பற்றிக் கொஞ்சங்கூடக் கவனிக்கவில்லை" என்று கண்டிக்க முன்வந்தார்கள். இவர்களுடைய தப்பெண்ணத்தைக் கமிட்டியின் இரண்டாவது அறிக்கை நீக்கி விடுகிறது. தவிர, பாடத் திட்டத்தில் காணப்படும் விஷயங்கள் பையன் கற்கும் கைத்தொழிலோடு எப்படி இணைக்கப்படும் என்பதையும் விவரிக்கிறது. கைத்தொழிலே வாழ்க்கைக்குச் சம்பந்தப்பட்டதாக இருப்பதனால், பையனுடைய வாழ்க்கை, கற்கும் தொழில், தொழிலோடு சேர்ந்த கல்வி—எல்லாம் ஒன்றோடொன்று பொருந்தி லயித்து விளங்கும் என்பது இந்த இரண்டாவது அறிக்கையின் மூலம் தெரியப்படும்.

இந்த இணைப்பு எவ்விதத்தில் சாத்தியம் என்று கமிட்டியின் அறிக்கையில் காண்பித்திருப்பதைக் கவனிப்பதற்கு முன் பாடத் திட்டத்தைப் பற்றிய சென்னை ஆசிரியர் சங்கத்தின் கருத்து குறிப்பிடத்தக்கது: "தொழிலுக்கும் அறிவுக்கும் முரண்பாடு இருக்க முடியாது என்பது எல்லோராலும் அறியப்படுகிறது. இவ்விரண்டையும் வேறாகப் பிரிப்பதனால் ஒருவனுடைய மனமும் காயமும் சரிவர வளர்ச்சியடைவதற்கு இடையூறு ஏற்படும். பிள்ளைகளைச்

சுற்றுப்புற விஷயங்களோடு நெருங்கிய சம்பந்தம் வைத்துக்கொள்ளச் செய்து சமூக சிருஷ்டி வேலையில் அவர்களுக்கு உற்சாகம் ஏற்படும்படியான பழக்கத்தை உண்டாக்க வேண்டும் என்று கல்வி விஷயங்களில் தேர்ந்தவர்கள் வற்புறுத்துகிறார்கள். ஆகவே, ஒரு அடிப்படையான தொழில் மூலம் கல்வி போதிக்கும் கொள்கையை நாங்கள் சிறிதும் தயங்காமல் அங்கீகரிக்கிறோம்.''

"பாடத் திட்டத்தின் விஷயங்களைப் பொருத்தமான அநுபவ அம்சங்களாக அமைக்க முயற்சித்திருக்கிறோம். இந்த அம்சங்களை நன்ருய்க் கிரகித்த பையன் தன்னுடைய சுற்றுப்புற வாழ்வை நன்ருய் அறிந்துகொள்வதோடு வாழ்க்கையில் புத்திசாலித்தனமாய் நடந்துகொள்ளவும் முடியும். ஏனெனில், இந்தப் பாட விஷயங்கள் வாழ்க்கையில் ஏற்படும் பிரச்னைகளைத் தீர்க்க அவனுக்கு உதவி செய்யும். தற்போது போதிக்கப்படும் பாடங்கள் ஒன்றுக்கொன்று சிறிதும் சம்பந்தமில்லாமலிருப்பதால் நாங்கள் வகுத்திருக்கும் பாடத் திட்டம் நல்ல முறையைக் கைக்கொண்டது என்று நம்புகிறோம். சமூக சம்பந்தமான விஷயங்களைப் பற்றி நாங்கள் தயாரித்திருக்கும் திட்டம் இதற்கு ஒரு உதாரணமாகும்'' என்று கமிட்டியார் விளக்கி யிருக்கிறார்கள்.

இப்பொழுது போதனமுறைக் கல்லூரிகளில் இதே முறைதான் வற்புறுத்தப்படுகிறது. மேல்நாடு

களில் கையாளப்பட்டுவரும் முறையாகிய 'பிரா ஜெக்ட்' என்ற முறையைப் பற்றி கல்லூரிகளில் போதிக்கப்படுவது ஆசிரியர்கள் அறிந்ததுதான். ஆனால் அந்த 'பிராஜெக்ட்' முறையைக் கையாளுவ தற்குத் தற்சமயம் பள்ளிக்கூடத்தில் போதிய சாத னங்கள் இல்லை. முக்கியமாகப் பாட விஷயங்கள் முற்றிலும் வேறுபட்டிருக்கின்றன. அவைகளுக் கும் தினசரி வாழ்க்கைக்கும் நெருங்கிய சம்பந்தம் இல்லை. அப்படிச் சம்பந்தம் ஏற்படுத்தும் சாதன மான கைத்தொழிலும் பாடத் திட்டத்தில் இல்லை.

---

## 11. சமூகப் பாடங்கள்

சமூக சாஸ்திரத்தில் சேர்ந்த சரித்திரம் பூகோ ளம் முதலிய விஷயங்கள் ஒன்றுக்கொன்று நெருங் கிய சம்பந்தம் இருக்க வேண்டுமானால், இப்போதிருப் பதைப் போல் சரித்திரம் என்று தனியாக ஒரு பாட மும், பூகோளம் என்று தனியாக ஒன்றும் இருந்து பயனில்லை. சரித்திரம் வேறு, பூகோளம் வேறு, தன் கிராம வாழ்க்கை வேறு என்ற எண்ணம் பையனுக்கு ஏற்படக் கூடாது. தேச சரித்திரத்தில் தன்னுடைய கிராம வாழ்க்கையும் ஒரு பகுதி; தேச சரித்திரத்தை உருவகப்படுத்தியது ராஜாக்களும் மந்திரிகளும் மாத்திர மல்லர், தேசத்தின் பூகோளமும் பாதித் திருக்கிறது என்ற பாட ஒற்றுமை உணர்ச்சி பைய னுக்கு ஏற்பட வேண்டும். இப்படிப்பட்ட பரஸ்பர

சம்பந்தமுள்ள விஷயங்கள் ஒன்ருகச் சேர்க்கப் பட்டுப் பையனுடைய வாழ்க்கைக்குச் சம்பந்தப்பட்ட முறையில் போதிக்கப்பட்டால்தான் பையன் சிரத்தையுடன் கவனிப்பான். இதற்காக அமெரிக்காவில் ஏற்பட்டிருக்கும் ஒன்றுபட்ட சமூகப் பாடங்களின் முறை (Unified course of Social Sciences) இவ்விடத்தில் கவனிக்கத் தக்கது. இந்த முறையின் கீழ் ஒரு ஸ்தலத்தைப் பற்றிப் பையன் படிக்க வேண்டுமானல் அந்த இடத்தின் சரித்திரம், பூகோளம், அதற்கும் தனக்கும் உள்ள சம்பந்தம் முதலிய விஷயங்கள் எல்லாவற்றையும் கற்றுக்கொள்ளுகிருன். அந்நிய நாட்டுப் பூகோள சாஸ்திரம் நன்ருய் அறிந்திருந்தும் தம்முடைய கிராமத்தில் ஓடும் நதி எங்கு உற்பத்தியாகிறது என்பது தெரியாத பையன்கள் இப்பொழுது இல்லாமல் இல்லை.

சரித்திரம் வெறும் சண்டைகளும் தேதிகளும் கொண்ட ஜாபிதா அன்று. மனித வர்க்கத்தின் வளர்ச்சியைப் பற்றித் தெரிவிக்கும் ஓர் நூல்; சமூக ஒற்றுமைக்கு வழிகாட்டும் பாடம்; யுத்தத்தில் நாடுகளை ஜெயித்தவர்களைவிட மனித சமூகத்திற்கு நன்மை செய்தவர்களே சிறந்தவர்கள்; பலாத்காரத்தைவிட அஹிம்சையே சிறந்தது என்ற விஷயங்களைப் புகட்டுவதுதான் சரித்திரம் என்ற முறையில் வார்தா அறிக்கையில் சரித்திரத்தைப்பற்றிய திட்டம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

பூகோள சம்பந்தமான பாடத்தில் கல்வி நேரடியான அநுபவ மூலம் போதிக்கப்பட வேண்டும்; இயற்கை யமைப்பைப் பற்றிய கதைகளும், படங்களும் உபயோகிக்கப்பட வேண்டும்; கால நிலைமை சூரியனின் உயரத்தையும் உஷ்ணத்தையும் நேராகப் பார்த்து அறியப்பட வேண்டும்; கிராமத்தில் நடக்கும் விவசாயக் கைத்தொழில் காரியங்களை நேரில் சென்று பார்த்து அறிய வேண்டும் என்பவை வார்தா கமிட்டியின் குறிப்புக்களில் விசேஷமானவை. இந்தக் குறிப்புக்களிலிருந்து, பையனுடைய பூகோளப் பாடத்திற்கும், அவன் படிக்கும் கதைகளுக்கும், பார்க்கும் விஷயங்களுக்கும் எவ்வளவு நெருங்கிய சம்பந்த மிருக்கிறது என்பதை அறியலாம். 12 - மணிக்குச் சூரியன் தலைக்கு மேல் அதி உஷ்ணமாகப் பிரகாசிக்கும் போது பையன் வெயிலைத் தெரிந்துகொள்வதோடு நில்லாமல் அதன்காரணத்தையும் அறிவான்.

கிராமங்களில் பள்ளிக்கூடத்திற்குச் செல்லும் பையன்கள் எத்தனையோ மரங்களையும் வயல்களையும் கடந்து செல்லுகிறார்கள். பள்ளிக்கூடம் சென்றதும் அவர்கள் படிப்பது முற்றிலும் வேறு விஷயம். தாங்கள் நேரே பார்க்கும் விவசாயத் தொழில்களையும், மற்ற தொழில்களையும் பற்றிச் சிந்திப்பதற்கே அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடையாது. தம்முடைய கிராமத்தில் விசேஷக் கைத்தொழில் என்ன வென்பதைப் பையன்கள் புத்தகத்

தில் படித்து உருப்போட்டும் பரீக்ஷையில் எழுத மறந்துவிடுவது சகஜம்தான். தினசரி கடந்து செல்லும் வயல்களில் எப்பொழுது நாற்று நடுகிறார்கள், எப்பொழுது அறுவடை என்று கேட்டால் பையன்கள் உடனே பதில் சொல்லத் தயங்குகிறார்கள். புத்தகத்தில் இருந்தால் படித்துச் சொல்லிவிடுவார்கள். இந்த நிலைமையை ஒழிப்பதற்காகத்தான் பாடங்கள் ஒன்றோடொன்று இணைக்கப்படுவது அவசியமாகிறது.

" நம்முடைய குழந்தைக்குப் பூகோளம் சொல்லிக் கொடுப்பதற்காக, இயற்கையான பூமியின் அநுபவம் அவனுக்குக் கிடைக்காமல் செய்துவிடுகிறோம். இலக்கணம் சொல்லிக் கொடுப்பதற்காகப் பாஷையை அவனிடமிருந்து பறித்துவிடுகிறோம் " என்று ரவீந்திரநாத் தாகூர் தற்போதைய கல்வியின் நிலைமையைக் கண்டிக்கிறார். " வெளியில் பார்க்காதே, புத்தகத்தைப் பார்! " என்ற கட்டளையுடன் பூகோளப் பாடம் போதிக்கப்படுவதும், "புத்தகத்தில் இருப்பதைப் போல் பேசு. தெருவில் பேசுவதைப் போல் பேசாதே!" என்று இலக்கணம் போதிக்கப்படுவதும் தாகூர் கூற்றுக்கு உதாரணங்களாகும். மேலும், " குழந்தை புராணக் கதைகளுக்காக ஆசைப்படுகிறான். நாம் தேதிகளும் சம்பவங்களும் நிறைந்த ஜாபிதாவை அவனுக்குப் போதிக்கிறோம். பையன் மனித உலகத்தில் பிறந்தான். ஆனால் அவன் பிறக்கும்போதே அறிவுடன் பிறக்

காத குற்றத்திற்காக உயிருள்ள கிராமபோன்கள் நிறைந்த உலகத்துக்கு அவனைக் கொண்டுபோய் விடுகிறோம்" என்று தாகூர் கூறியிருப்பது இப்பொழுது போதிக்கப்படும் சரித்திரத்தின் தனிப்பட்ட, சம்பந்தமற்ற நிலைமையை விளக்குகிறது.

தேசிய விழாக்கள் கொண்டாடுவதும், தேசிய முன்னேற்றச் சரித்திரத்தின் போதனையும் பையன்களுக்கு ஒருவித உற்சாகத்தைக் கொடுப்பதோடு, அவர்களுடைய மனப்பான்மையை மாற்றிச் சுய மரியாதையும், சுய நம்பிக்கையுமுடைய ஒரு சமூகம் தானாக வளருவதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் அளிக்கும். தேசத்தில் கட்டுப்பாடு ஏற்படுத்துவதே கல்வியின் நோக்கம் என்றிருக்கும் போது இந்த மாதிரியான பாட விஷயங்கள்தான் அந்த நோக்கத்தைப் பூர்த்திசெய்ய முடியும். வார்தா திட்டத்தில் சமூக சாஸ்திரத்தின் கீழ் தொகுக்கப்பட்டுள்ள ஆறு விதமான நோக்கங்களும் பூர்த்தியாவதற்குச் சரித்திரம், பூகோளம் முதலிய பாடங்கள் இம்மாதிரி இணைக்கப்பட்டுத் திருத்தி யமைக்கப்பட வேண்டியது அவசியம். இத் திட்டத்தின் பாடங்கள் ஒன்றோடொன்று பரஸ்பர சம்பந்த முடையனவாய் இணைக்கப்படுவதால் பள்ளிக்கூடத்தில் ஏற்படும் சுறுசுறுப்பையும் உற்சாகத்தையும் கமிட்டியின் இரண்டாவது அறிக்கை இன்னும் பல உதாரணங்களுடன் விளக்குகிறது.

---

## 12. படிப்பில் உற்சாகம்

“ சமூக சாஸ்திர விஷயங்களும், ஸயன்ஸ் பாட விஷயங்களும் சித்திர வேலையுடன் இணைக்கப்படு கின்றன. சரித்திரமும் பூகோளமும் பையன் தன் னுடைய தொழிலில் உற்சாகம் கொள்ளுமாறு செய்கின்றன. தோட்ட வேலையும் விவசாயமும் கல்வியின் முக்கிய அம்சங்க ளாகின்றன. ஆகவே, பள்ளிக்கூடத்தில் எப்பொழுதும் சுறுசுறுப்பும் உற் சாகமும் குடிகொண்டிருக்கும்” என்று கமிட்டி கருதுகிறது.

சித்திர வேலையையும் மற்ற பாடங்களையும் எவ் வளவு சுலபமாக இணைக்க முடியும் என்பது சிறிது யோசித்தால் நன்ருய்ப் புலனுகும். பையன் பூவின் பல பாகங்களைப் பற்றி ஸயன்ஸ் பாடத்தில் படிக் கும்போது சித்திரப் பாடக் காலத்தில் ஒரு சிங்கத் தின் படத்தைப் போடக் கற்றுக்கொள்வதைவிட சில புஷ்பங்களின் படத்தை வரைவது இரண்டு பாடங்களுக்கும் எவ்வளவு உபயோகமாயிருக்கும்! பூகோளப் பாடத்தில் மலைப் பிரதேசங்களைப்பற் றிப் பாடம் நடக்கும் வாரத்தில் பையன் சித்திர வகுப்பில் பாத்திரங்களின் உருவத்தைப் படம் போடுவதைவிட மலைகளை வரையும்படி சித்திரமும் பூகோளமும் இணைக்கப்படுவது நல்லதுதானே! சரித்திரத்தில் தேசப் படங்களையும் அந்தந்தக் காலத்து ஆடை யாபரணங்களையும் பற்றிப் படம் வரையப் பையனுக்குச் சித்திரப் பாடக் காலத்தில்

சந்தர்ப்பம் கிடைத்தால் எவ்வளவு உபயோகமா யிருக்கும்!

நமது தேசம் முக்கியமாக விவசாயத்தையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. இதுவே கிராமங் களின் எண்ணிக்கைக்குக் காரணம். இயற்கை நிலை மையினால் காவேரி, கோதாவரி போன்ற நதிகளி னால் நிலச் செழிப்பு ஏற்படுகிறது. நிர்வாக விஷயத் தில் அக்பர் காலம் தொட்டு நில விஷயமான சீர் திருத்தமே முக்கியமா யிருந்தது என்ற விஷயங்க ளைச் சரித்திர மூலமாகவும் பூகோள மூலமாகவும் தெரிந்துகொண்ட பையனுக்குத் தான் கற்றுக் கொள்ளும் விவசாயத் தொழிலின் மேல் எவ்வளவு பிரியமும் சிரத்தையும் ஏற்படும்!

பருத்தி விளைவைப் பூகோளப் பாட மூலமாக வும், அதன் ஏற்றுமதியைப் பொருளாதார அம்சத் தின் மூலமாகவும், லங்காஷயரில் மாத்திரம் அதிகத் துணிகள் செய்யப்படும் காரணத்தை இங்கிலாந்தின் சரித்திர, பூகோள விஷயங்களின் மூலமாகவும் அறிந்த பையனுக்கு, நூற்றல், நெசவுத் தொழிலில் சிரத்தை ஏற்படுவதற்குப் பொதுக்கூட்டங்களும் பிர சங்கங்களும் அவசியமில்லை. தன்னுடைய பள்ளிக் கூடத்தில் கற்பிக்கப்படும் நெசவுத் தொழிலில் அவன் இன்னும் அதிக உற்சாகத்துடன் ஈடுபடு கிறான். இயந்திரத் தொழிலுக்கு நம் நாட்டில் அதிகச் சாதனங்கள் இல்லை என்று அறிந்த பைய

னுக்குக் கைராட்டினம் மூலம் நூல் நூற்பதில் தானு கவே சிரத்தை ஏற்பட்டுவிடும்.

பள்ளிக்கூடத் தோட்டத்தில் கொத்துவதிலும், விதைப்பதிலும், தண்ணீர் பாய்ச்சுவதிலும் பையன் கள் உற்சாகமாக ஈடுபடுவதால் பள்ளிக்கூடத்தில் எப்பொழுதும் கலகலப்பாக இருப்பதற்குக் கேட்க வேண்டுமா ? புஷ்பங்களைப் படம் போடக் கற்றுக் கொண்ட பையன் தோட்டத்தில் உள்ள புஷ்பங் களை எவ்வளவு ஜாக்கிரதையாகப் பாதுகாப்பான் ! இயற்கையின் வனப்பை உணர்ந்து, அதில் ஈடுபட்டு ஆனந்தமடைவதற்கு அவனுக்குச் சந்தர்ப்பமும் பயிற்சியும் கிடைக்கிறது. இயற்கைப் பொருட் பாடம் கற்கும் பையனுக்குத் தன் இஷ்டம் போல் திரிவதற்குச் சௌகரியமான ஒரு தோட்டத்தை விட வேறு என்ன புஸ்தகம் வேண்டும் ? இம்மாதி ரித் தோட்டங்கள் நிறைந்த பள்ளிக்கூடங்களில் பையன்களுக்காவது உபாத்தியாயருக்காவது தூங்கு வதற்குச் சந்தர்ப்பம் கிடைக்குமா ? மனம்தான் வருமா ? சிறுவனின் இயற்கையான சுறுசுறுப் புக்கு இம்மாதிரியான வேலை பொருத்தமா யிருக் கிறது. தவிர, அவன் வீணாகத் தெருவில் ஓடித் திரிந்து காலம் கழிக்காமல் தான் கை கால்களால் சுறுசுறுப்பாக வேலை செய்யும்போது மூளையும் உணர்ச்சியும் விருத்தி யடைவதற்கும் எவ்வளவு சாதனங்கள் இருக்கின்றன ! இந்த மாதிரியான அம்சங்கள் பாடத் திட்டத்தின் முக்கியப் பகுதிக

ளாக ஏற்பட்டா லொழியப் பொதுவாக எல்லாப் பையன்களுக்கும் இந்தச் சந்தர்ப்பங்கள் கிடைப்பது அருமை. இதற்காகத்தான் வார்தா கமிட்டியின் பாடத் திட்டத்தில் இவை முக்கியமான அம்சங்களாக விளங்குகின்றன.

ஒரு பாடத் திட்டமோ கல்வித் திட்டமோ எவ்வளவு சிறந்ததா யிருந்தாலும் அதை நடை முறையில் கொண்டுவருவதுதான் முக்கியம். சுறுசுறுப்பான நடவடிக்கைகள் மூலம் நடத்தப்படாத எந்தப் பாடத் திட்டமும் பயனற்றுப் போய்விடும் என்று கமிட்டி கருதுகிறது. இதை உத்தேசித்துத்தான் கமிட்டியின் இரண்டாவது அறிக்கையில் திட்டத்தின் அம்சங்களான சில பாடங்கள் எந்த விதத்தில் நடத்தப்படவேண்டு மென்பதை உதாரணமாகக் குறிப்பிடுகிறது.

---

## 13. தாய்மொழிப் பயிற்சி

பாடத் திட்டத்தில் தாய்மொழியைப் பற்றிக் குறிப்பிடும் போது தாய்மொழி மூலம் பையனின் கற்பனை வளர்ச்சியும் தினசரி வாழ்க்கைக்குத் தேவையான அறிவும் அடைவது நோக்கமாகக் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது அறிக்கையில், "பாடங்கள் ஒன்றோடொன்று இணைக்கப்படுவதற்காகத் தாய்மொழிப் பாடம் பின்வரும் பலன்களைக் கொடுக்கக் கூடியவாறு அமைக்கப்பட வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கிறது:

1. "குழந்தைகளின் மனதில் சுற்றுப்புறத்தில் உள்ள இயற்கை அற்புதங்களைப் பற்றிய உணர்ச்சி விஸ்தாரம் ஏற்படவேண்டும்."

இதன் பிரகாரம் தயாரிக்கப்பட்ட தாய்மொழிப் பாடத்திற்கும், பூகோள சாஸ்திரத்திற்கும், இயற்கைப் பொருட் பாடத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் ஏற்படச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. பையன்கள் பார்த்து அநுபவித்ததையே தாய்மொழிப் பாடத்தில் கோர்வையாகப் படிக்க முடிகிறது. படிக்கும்போது அவர்களுடைய கற்பனை அதிகச் சிரமம் இல்லாமல் வளர்ச்சி யடைகிறது.

2. "பள்ளிக்கூடத்தில் கற்கும் கைத்தொழில் பலவித அம்சங்களையும், வீடு, கிராமம், பள்ளிக்கூடம் முதலியவற்றில் நடக்கும் நடவடிக்கைகளையும் கவனித்து விவரிக்கும் சக்தி பையனுக்கு ஏற்படும்படி இருக்கவேண்டும்."

முதலில் குறிப்பிட்ட பலனுக்கு இது பிரதி பலன் என்று சொல்லலாம். தன்னுடைய சுற்றுப்புற இயற்கைக் காக்ஷிகளை எழுத்து மூலம் உணர்ந்து கிரகித்த பையன் தானே சில விஷயங்களை விவரிக்க முயலும்போது தாய்மொழி நடையை நாளடைவில் லாகவமாகக் கையாள முடியும். பள்ளியில் தாய்மொழிப் பயிற்சியில் வியாசத்துக்காகக் கொடுக்கப்படும் விஷயங்கள் தனிப்பட்டவையா யில்லாமல் கற்கும் கைத்தொழிலுக்கும் அந்தக் கைத்தொழிலோடு

இணைக்கப்பட்ட வாழ்க்கைக்கும் நெருங்கிய சம்பந்த முள்ளதாகவே இருக்கவேண்டும் என்பது இதிலிருந்து அறியப்படும். தமிழ்ப் பாடப் புத்தகத்தில் நெருப்புக் கோழியைப் பற்றி ஒரு பாடம் இருந்தால், "அதைப் பற்றி ஒரு வியாசம் எழுது" என்று உபாத்தியாயர் கட்டளை யிடுவதில் அதிகப் பிரயோசனம் இருக்க முடியாது. இந்தத் திட்டத்தின் கீழ், வாழ்க்கைக்கு நெருங்கிய சம்பந்தமில்லாத நெருப்புக் கோழிப் பாடத்தை வியாசமாகப் பையன்களுக்கு அப்பியாசம் கொடுக்க முடியாது. ஆனால் நெருப்புக் கோழிப் பாடமும், எரிமலை முதலிய பாடங்களும் தமிழ்ப் புத்தகத்தில் இருக்கக்கூடாது என்று கொள்ளவேண்டிய தில்லை. பூகோளத்துடன் தாய்மொழிப் பாடத்தை இணைப்பதற்கு இம்மாதிரிச் சில பாடங்கள் அவசியமா யிருக்கலாம். ஆனால் பையனின் கற்பனையைப் பரிசோதிக்கும் சாதனமான வியாசத்திற்கு இவைகளைக் கொடுத்துவிட்டால் கற்பனைக்குச் சிறிதும் வேலையின்றி, பையன் கற்றதை அப்படியே திருப்பிப் பாடும் கிராமபோன் பிளேட்டாகி விடுவான். தான் நன்றாய்ப் பார்த்து அநுபவித்த விஷயத்தில் பையனுடைய கற்பனை விஸ்தாரத்திற்குப் போதிய செளகரிய மிருக்கிறது.

3. "தொழில் சம்பந்தமாயும் தனிப்பட்ட முறையிலும் கடிதங்கள் எழுதி, சமூக வாழ்க்கையின் நடவடிக்கைகளில் பையன் ஈடுபடவேண்டும்."

4. "அடிப்படையான கைத்தொழில்களின் தினசரி வேலையையும் விருத்தியையும் பற்றிய புள்ளி விவரங்கள் தயாரிக்கவேண்டும்."

இவ் விரண்டும் பையன் பொது வாழ்க்கையில் ஈடுபடும்போது தாய்மொழி மூலம் தன்னுடைய விவகாரங்களை நடத்துவதற்குச் சந்தர்ப்ப மளிப்பதற்காக நிறுவப்பட்ட விதிகள் என்று அறியலாம். ஒவ்வொரு பையனும் தன்னுடைய வேலையைப் பற்றிய அறிக்கையைத் தயார் செய்யும் போதும் கடிதங்கள் எழுதும் போதும் தன்னுடைய எண்ணங்களையும் தொழில் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் தாய் மொழி வார்த்தைகள் மூலமாகவே வெளியிடக் கற்றுக்கொள்ளுகிறான். இந்தப் பயிற்சி பள்ளிக்கூடத்திலேயே ஏற்பட்டு விடுவதால் பிற்கால வாழ்க்கையில் இக் காரியம் சுலபமாகி விடுகிறது. தவிர, தாய் மொழிப் பாடம் வெறும் புத்தக அறிவை வளரச் செய்யாமல் தொழில் சம்பந்தப்பட்ட வாழ்க்கையின் தேவைகளுக்குத் தக்கவாறு இணைத்து அமைக்கப் படவேண்டிய அவசியமும் ஏற்படுகிறது.

5. "பள்ளிக்கூடப் பத்திரிகை ஒன்று தயார் செய்வதில் உதவி செய்வதற்கும் அன்றாட சமாசார அறிக்கை யொன்று தயார் செய்வதற்கும் பையனுக்குத் தெரிய வேண்டிய சௌகரியம் இருக்க வேண்டும்."

இதிலிருந்து, தாய்மொழிப் பாடம் வெறும் வழக்கமான வசன நடையில் மாத்திர மில்லாமல்

எல்லோருக்கும் புரியும்படியான கர்ச்சிதமான நடையில் விஷயங்களைப் பற்றித் தெரிவிக்கும் உதாரணங்களும் கொண்டதா யிருக்கவேண்டு மென்பது வெளிப்படை. தவிர, தாய்மொழிப் பத்திரிகைகள் படித்தல் பாடத்தின் ஒரு அம்சமாக இருந்தால்தான் இந்தப் பலனுக்கு வசதி ஏற்படும். தெளிவான இலக்கிய நடை என்பது எல்லோருக்கும் எளிதில் புரியும்படியாக இருக்கவேண்டும். தாய்மொழி இலக்கியம் பண்டிதர்களின் விசேஷச் சிற்றுண்டியல்ல, படித்தவர்கள் எல்லோரும் உட்கொள்ளக் கூடிய உணவுதான் என்பது பையனுக்குத் தெரியும்படி பாடங்கள் அமைக்கப்பட வேண்டும்.

6. "பொதுவான ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றிப் போதிய கால அளவில் கோர்வையான ஒரு பிரசங்கம் செய்யத் திறமை ஏற்பட வேண்டும்."

இந்தத் தேவை பாடப் புத்தகத்தின் பலவிதப்பட்ட தன்மைக்கு மற்றும் ஒரு வசதி அளிக்கிறது. பையன் இத்தகைய பிரசங்கங்களைச் செய்யப் பயிற்சி பெறுவதற்காகப் பாடத்தில் புகழ் பெற்ற தலைவர்களின் பிரசங்கப் பகுதிகள் சேர்க்கப்பட வேண்டியது அவசியமாகிறது. அந்தப் பிரசங்கங்களின் விஷய அமைப்பையும், பெருங் கூட்டத்தினர் மனதில் பசுமரத் தாணி போல் பதியச் செய்த உணர்ச்சி நிறைந்த நடையையும் பார்த்துப் பையன் உபயோகமும் உற்சாகமும் அடைவதோடு,

தாய்மொழியின் மூலம் யோசனைகளை வெளியிடு வதில் புதிய முறை யொன்றைக் கற்றுக்கொள்ளு கிறான். கிராமத்தில் நடக்கும் பொதுக் கூட்டங்களுக் கும் தன்னுடைய பாடத்திற்கும் சம்பந்தமில்லை யென்ற அசிரத்தையான உணர்ச்சி பையனுக்கு ஏற்படாது. தன்னுடைய சிறு சமூகத்தில் நடக்கும் பொது விஷயங்களில் சிரத்தை யெடுத்துக்கொண்டு, பொது வாழ்க்கைக்குத் தன்னை யறியாமலே தயார் செய்து கொள்ளுவான்.

7. "அழகான இலக்கிய நூல்களைப் படித்து அநுபவிக்கும் திறமை ஏற்படவேண்டும்."

"வார்தா திட்டத்தினால் கலாசாரமே போய் விடும், படிப் பறிவுக்குத் தடை ஏற்படும், பையன் கள் எல்லோரும் வெறும் கைத்தொழில் யந்திரங் களாகவே மாற்றப்படுவார்கள்" என்று 'கல்வி நிபு ணர்கள்' கண்டிப்பதற்கு இது சரியான பதிலா கும். வார்தா திட்டத்தில் கைத்தொழில்தான் அடிப் படை என்றாலும் இலக்கிய அறிவு வளர்ச்சிக்குப் பங்கம் ஏற்படாது. பையன் தாய்மொழியின் அழகு முழுவதையும் அநுபவித்து ஆனந்திக்க வசதி உண்டு என்பதை இது விளக்குகிறது. தவிர, தற்போதைய கல்வியில் தாய்மொழிக்குச் சரியான ஸ்தானம் கொடுக்கப்பட வில்லை யென்று வருந்து கிறவர்களுக்கு இது தக்க சமாதானமாகும். சமீ பத்தில் நடந்த சென்னை ஆசிரியர் சங்க மகாநாட் டில் பள்ளிக்கூடங்களில் தமிழ் ரொம்பவும் மோச

மான நிலைமையில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டது. உச்சரிப்பு மிகவும் கேவலமாகப் போய்விட்டதென்றும் இந்த விஷயத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்தவர் குறிப்பிட்டார். இந்தத் தீமைகளுக்கு மேற்கண்ட இரண்டு முறையான பாட அமைப்பும் பரிகாரம் கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை. பையனுக்கு இலக்கியத்திலிருந்து உதாரணங்கள் காண்பித்து அழகான தாய்மொழியைப் போதிப்பது அவசியம் என்பதை இந்த நோக்கம் வற்புறுத்துகிறது.

இந்தக் கோட்பாடுகளை யெல்லாம் முடிவில் சுருக்கமாக வார்தா கமிட்டி இரண்டாவது அறிக்கை பின்வருமாறு குறிப்பிடுகிறது :

"இந்த ஜாபிதா, தாய்மொழிப் பாடப் புத்தகத்திற்குப் பாட விஷயங்கள் பொறுக்குவதை மாத்திரம் குறிப்பிடவில்லை. தாய்மொழிக்கும், சமூக சாஸ்திரத்திற்கும், கிராம வாழ்க்கைக்கும், பையன்களுடைய நடவடிக்கைகளுக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தை வற்புறுத்துகிறது. ஆகவே, தாய்மொழியைப் பையன் அறிவு வளர்ச்சிக்கு ஒரு கருவியாக உபயோகப்படுத்திக் கொள்வதோடன்றி தினசரி வாழ்க்கைக்குத் தேவையாக உபயோகிக்கவும் வசதி ஏற்படும் வண்ணம் போதனை முறை இருக்கவேண்டும்."

இதன் பலனைகத் தாய்மொழிப் பாடப் புத்தகம் நானுவித விஷயங்களுடன் ஸ்வாரஸ்யம் தருவ

தோடு போதனையும் ஸ்வாரஸ்யமா யிருக்கும். விஷயத்திற்கு முக்கியம் கொடுக்காமல் வார்த்தைகளுக்கு மாத்திரம் அர்த்தம் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற முறையில் தயாரிக்கப்பட்ட புத்தகங்களுக்கு இடமிருக்காது. தாய்மொழிப் பாடத்தில் பையனுக்கு அதிக சிரத்தை ஏற்படும். அந்தப் பாடம் தன்னுடைய மற்ற பாடங்களையும் பாதிக்கிறது என்ற எண்ணமே பையனின் உற்சாகத்தையும் கவனத்தையும் இழுக்கப்போதுமானது. பாடங்கள் தன்னுடைய கல்விக்கும், தொழிலுக்கும், வாழ்க்கைக்கும் சம்பந்தப்பட்டவையா யிருப்பதால் பையன் எளிதில் தன் பாடத்தில் வரும் நடை நுணுக்கங்களையும் பதப் பொருள் விஷயங்களையும் அறிய ஏதுவாகிறது. பள்ளிக்கூடத்தில் தாய்மொழி தனக்குரிய உயர்ந்த சிம்மாசனத்தில் அமர்ந்து, மந்திரி பிரதானிகளான மற்ற பாடங்களுடன் அரசு செலுத்திவரும் காக்ஷியை ஒவ்வொரு தாய்மொழி அன்பனும் கண்டு களிக்கச் சந்தர்ப்பம் கிடைக்கும்.

---

## 14. சமூக நிர்வாகம்

சமூக சம்பந்தமான பாடங்களில் ஒன்றாகிய ஸிவிக்ஸ் என்னும் சமூக நிர்வாக விஷயம் இத் திட்டத்தில் ஒரு முக்கிய ஸ்தானத்தை வகிக்கிறது. "இந்தப் பாடத்தினல்தான் பையன் தற்காலப் பிரச்னைகளை அறிவதோடு சமூக சம்பந்தமாகவும்

தன்னுடைய பொது அறிவு சம்பந்தமாகவும் சரியான மனப்பான்மையை வளரச் செய்துகொள்வதற்கு வேண்டிய வசதி ஏற்படுகிறது.''

பையனுடைய சுற்றுப்புற விஷயங்களை நன்ருக ஆராய்வதின் மூலமாகவும், பள்ளிக்கூடத்திலேயே சுயாட்சி ஸ்தாபனங்களை ஏற்படுத்தியும் இந்த விஷயத்தைப் போதிப்பது அவசியமாகிறது. இம்மாதிரியான பள்ளிக்கூடச் சங்கங்களின் கூட்டுறவு அம்சங்கள் பையன் சமூகக் கூட்டுறவின் அவசியத்தை நடைமுறையில் தெரிந்துகொள்வதற்கு உதவி செய்யும் என்று கமிட்டியார் கருதுகிருர்கள்.

சமூகப் பாட விஷயங்கள் ஒன்ருேடொன்ருகவும் மற்ற பாடங்களோடும் இணைக்கப்படுவது மாத்திரம் போதாது. வேருெரு விசேஷ முறையும் குறிப்பிடப்படுகிறது. அதாவது, பையனுடைய குடும்ப சமூக வாழ்க்கை, கிராமக் கைத்தொழில் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டுமென்பதுதான். இப்படி ஆரம்பிக்கும் பாடங்கள் ஆதியில் வாழ்ந்த மனிதர்களின் நாகரிகத்தைப் பற்றிய கதைகளாக விஸ்தரிக்கப்படலாம். அதன் பிறகு இட வித்தியாசத்தாலும் சமூக வேறுபாடுகளாலும் அங்கங்கே சமூக வாழ்க்கை வித்தியாசப்பட்டிருப்பதைக் குறிப்பிடலாம். சமூக மாறுபாடுகளும், விசேஷப் பழக்க வழக்கங்களும், எப்படி இயற்கை யமைப்பினுல் பாதிக்கப்படுகின்றன என்பதை விவரிக்கும் பொழுது பூகோளமும் சமூக

விஷயங்களும் ஒன்றோடொன்று இணைக்கப்படும். பையன் தன்னுடைய சமூகத்தின் பழக்க வழக்கங்களுக்குக் காரணத்தை ஆராயும் போதே தான் வசிக்கும் பிரதேசத்தின் இயற்கையையும் அறிய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஸிவிக்ஸ், சரித்திரம், பூகோளம் என்ற தனித் தனியான புத்தகங்களாலும் பாடங்களாலும் அவைகளின் பலனை நோட் புத்தகங்களாலும் பையனுக்கு ஏற்படும் கஷ்டத்தையும் வெறுப்பையும் நீக்கிவிடலாம்.

"கீழ் வகுப்புக்களில் பூகோளம், இயற்கைப் பொருட் பாடம் முதலியவைகள் வருஷத்தின் பருவ காலங்களை ஆதாரமாகக் கொண்டு போதிக்கப்பட வேண்டும். இந்த முறையில் பிள்ளைகள் இயற்கை விஷயங்களைக் கவனிக்க வசதி ஏற்படுகிறது. வெளியே உலாவச் செல்லுதல், தோட்ட வேலை, சிறு ஜந்துக்களைப் போஷித்து வளர்த்தல், பிரதேசத்தைப்பார்வையிட்டு அளப்பது முதலிய வேலைகளால் பையன்களுக்கு இயற்கையுடன் நெருங்கிய பரிச்சயம் ஏற்படும்படி புத்திசாலிகளான ஆசிரியர்கள் செய்துவிடலாம். கல்வி கற்கும் காலம் முழுவதிலும், பையன் நடைமுறையில் தன்னுடைய வேலைகளினாலேயே இம்மாதிரி அறிவைப் பெற்று, தன்னுடைய சமூக வாழ்க்கையின் விருத்திக்கு உபயோகிக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம். இதை யொட்டித்தான் பள்ளிக்கூடக் கல்வி சமூக வாழ்க்கையோடு இணைக்

கப்பட்டிருக்கவேண்டும் என்று நாங்கள் எங்களுடைய முதல் அறிக்கையில் வற்புறுத்தி யிருக்கிறோம்."

---

## 15. கைத்தொழிலும் கணக்கும்

மற்றொரு முக்கியமான பாடம் கணிதம். இதுவும் அடிப்படையான கைத்தொழிலோடு இணைக்கப்படவேண்டும் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. லக்ஷக் கணக்கான எண்களைக் கொடுத்துப் பெருக்கவும் வகுக்கவும் சொல்லாமல், பையனுடைய கைத்தொழில் சம்பந்தப்பட்ட எண்களைக்கொண்டே கணிதத்தின் பலவிதமான முறைகள் போதிக்கப்படவேண்டும். கைததொழிலோடும், தோட்ட வேலையோடும், விவசாய விஷயங்களான நிலம் அளப்பது, விவசாயக் கடன் முதலிய விஷயங்களோடும் இணைக்கப்பட்ட கணக்குப் பாடத்தில் சீக்கிரத்தில் சிரத்தை ஏற்படும். சமூக வாழ்க்கையின் பொருளாதாரப் பொறுப்புக்களைச் சரிவர உணர்வதற்கும் வசதி ஏற்படும்.

நூல் நூற்பதும் துணி நெய்வதும் அடிப்படையான தொழிலா யிருக்கும்போது, கெஜம், பர்லாங்கு முதலியவைகளை நூற்கும் நூலை ஆதாரமாகக் கொண்டும், விஸ்தீர்ணம் முதலியவற்றை நெய்யும் துணியை ஆதாரமாகக் கொண்டும் கற்பிக்கலாம். ஒரு கைராட்டினம் செய்வதற்குக் கொடுக்கவேண்

டிய கூலியின் விகிதத்தைக் கொண்டு சில கணக்கு கள் போடலாம். தோட்ட வேலை வயல் வேலைகளின் மூலம் விஸ்தீரணத்தைப் பற்றிய பெரிய கணக்குகள் போடலாம். விவசாயிகளின் வரி, கடன் முதலிய விஷயங்களைக் கொண்டு நாணயமாற்று, வட்டி முத லிய கணக்குகள் அமைக்கலாம். அர்த்தமில்லாத A என்பவன் B என்பவன் கணக்குகளும், ஒரு தொட் டியில் இரு குழாய்கள் நிரப்பிக்கொண்டிருக்கும் போது மற்றொரு குழாய் காலி செய்யும் வீண்வேலைக் கணக்குகளையும், மனிதர்களின் எண்ணிக்கையைப் பற்றி பின்னமாக விடை வரும் விசித்திரக் கணக்கு களையும் ஒழித்து, பையன் சீக்கிரத்தில் தேவையான முறையை அறிந்து கணக்குச் செய்வதற்கு வேண் டிய சுற்றுணர்ச்சியைக் கொடுக்கலாம். அனாவசிய மான வார்த்தைகளாலும் கற்பனைக் கெட்டாத விஷ யங்களாலும் கணக்குக்குத் தேவையான முறையை மறைக்கும் பழக்கத்திற்கு இத் திட்டம் இடம் கொடுக் காது. ஆயிரக் கணக்கான எண்கள் நிறைந்த சிக்க லான கணக்கைச் சில நிமிஷங்களில் ஒரு சுருக்கு வழியால் போடக்கூடிய பையன் கடை வீதியில் சில்ல றைச் சாமான் வாங்கும்போது சீக்கிரத்தில் கணக் குப் பார்க்க முடியாமல் தவிக்கும் அசம்பாவிதத்தை இப்படிப்பட்ட இணைப்பு நீக்கிவிடும். கணக்குகள் கற்கும் பாடங்களுக்கும் கைத்தொழிலுக்கும் பொருந்தியனவாக இருப்பதால் கணக்குப் பாடத் தில் பையனுடைய சமூக வாழ்க்கைக்குத் தேவை யான பிரச்னைகளே முக்கியமா யிருக்கும். இந்

தக் கணக்குகளைச் செய்வதில் பையன் வீண் காலம் போக்காமல் தன்னைப் பாதிக்கும் விஷயங் களின் சிக்கலையே தீர்த்துக் கொள்ளுவதாக எண்ணி உற்சாகப்படுவான். தனக்கு ஒரு விதத்தி லும் சம்பந்தப்படாத, தன் கற்பனைக்கும் எட்டாத ஒரு வியாபாரியின் லாப நஷ்டத்தையும், ஒரு முத லாளியின் லேவாதேவியையுமே கணக்குப் பார்ப் பதில் பையனிடம் நாம் எதிர்பார்க்கும் சிரத்தையை விட, அவனுடைய சொந்த வாழ்க்கைக்கும் கற்பனைக் கும் நெருங்கிய சம்பந்தமுள்ள கைத்தொழில் முத லிய வேலைகளில் ஏற்படும் புள்ளி விவரங்களைச் சரிவர அமைப்பதில் அதிக சிரத்தையும் ஸ்வாரஸ்ய மும் எதிர்பார்க்கலாம்.

---

## 16. விளையாட்டு

பாட இணைப்புக்களுக்குத் தேகப்பயிற்சி என்ற விஷயத்தை மற்றொரு உதாரணமாகக் குறிப்பிட் டிருக்கிறார்கள். தேகப் பயிற்சி சம்பந்தமான விஷயங்களைப் பிள்ளைகள் ஸயன்ஸ் பாடம் மூலம் கற்றுக்கொள்வார்கள். அவயவ வேலை மூலமாக அடையவேண்டிய பயிற்சியைக் கைத்தொழில் தோட்டவேலை முதலியவை மூலம் அடைந்து தேகா ரோக்கியத்தை அடையச் சந்தர்ப்பம் கிடைக்கிறது.

இதனால்தான் வார்தா திட்டத்தில் தனிப்பட்ட 'டிரில்' பாடம் காணப்படவில்லை. மற்ற பாடங்

களோடு இணைக்கப்படாத கால் கைகளை நீட்டும் தேகப் பயிற்சிப் பாடத்திற்கு இத் திட்டத்தில் இடமில்லை. போதுமான தேகப் பயிற்சி கற்கும் கல்வியின் நடவடிக்கைகள் மூலம் கிடைத்துவிடுகிறது. தனிப்பட்ட தேகப் பயிற்சிக்குப் பாடக் காலப் பாகுபாட்டில் 10 நிமிஷமே கொடுத்திருப்பதற்கும் இதைக் காரணமாகக் கொள்ளலாம்.

தேகப் பயிற்சி சம்பந்தமான விளையாட்டுக்குப் போதிய கவனம் செலுத்தவில்லை, அதற்குத் திட்டத்தில் ஒரு ஸ்தானம் கொடுக்கவில்லை யென்று சிலர் ஆக்ஷேபிக்கின்றனர். இந்த அக்ஷேபணைக்கு வார்தா கமிட்டி பின்வருமாறு பதிலளித்திருக்கிறது:

"விளையாட்டு என்பது பள்ளிக்கூடப் பாடத்திற்குப் புறம்பான விஷயமாதலால் அதற்கு நாங்கள் ஒரு தனிப்பட்ட ஸ்தானம் கொடுக்கவில்லை. அது ஒரு கட்டாயப் பாடமாக்கப்பட்டால் விளையாட்டு என்பதன் அர்த்தமே போய்விடும். ஆயினும் எங்களுடைய பாடத்திட்டத்தில் தனிப்பட்ட விளையாட்டுக்களுக்கும் சேர்க்கை விளையாட்டுக்களுக்கும் வசதிகள் அளித்திருக்கிறோம். நல்ல பள்ளிக்கூடங்களில் பலவிதமான விளையாட்டுக்கள் இருக்கும் என்று கருதுகிறோம். ஆனால் இப்படிப்பட்ட சுறுசுறுப்பான பள்ளிக்கூடங்களில், விளையாட்டு கல்வி முறையின் ஒரு முக்கிய அம்சமே யொழிய, பள்ளிக்கூடத் தொந்தரவை மறப்பதற்காக ஏற்பட்ட சௌகரியம் அன்று என்பதை மறக்கக் கூடாது."

பள்ளிக்கூடப் பாடங்களில் பற்றும் சிரத்தையும் இல்லாமல் பேசாமல் ஓரிடத்திலேயே உட்கார்ந்து கொண்டிருக்கும் பையன்களுக்கு விளையாட்டு என்று ஒரு வசதி ஏற்படுத்துவது அவசியமாகிறது. மணிக்கணக்காக உட்கார்ந்திருந்த அவர்களுடைய தேகங்களுக்கும் அவயவங்களுக்கும் ஒரு சுறுசுறுப்பைக் கொடுப்பதற்கும், கவனத்தினல் களைப்படைந்த அவர்களுடைய மூளைக்கு ஒரு ஓய்வு கொடுப்பதற்கும் விளையாட்டு என்பதைக் கட்டாயப் படுத்துவது அவர்களுடைய மனோ காய ஆரோக்கியத்திற்கு அவசியமாகிறது. வார்தா திட்டத்தில் கிட்டத்தட்ட 3½ மணி நேரம் கைத்தொழில் பாடத்திற்குக் கொடுப்பதையும், பாட இணைப்பினல் மற்ற பாடங்களிலும் அவர்களுக்கு வெளியிற் சென்று சுறுசுறுப்பாக இருக்கும் வசதி ஏற்படுத்துவதையும் கவனிக்கும் போது, அவர்களைக் கட்டாயமாக உற்சாகப் படுத்தவோ விளையாடச்செய்யவோ அவசியமில்லை என்பது புலனுகும். கைத்தொழில் வேலைக்கு இவ்வளவு நேரம் கொடுக்கப்பட்டதே பலரின் தீவிரமான கண்டனத்திற்குக் காரணமா யிருக்கிறது. அதைப்பற்றி மற்ருேரிடத்தில் குறிப்பிடுவோம்.

சங்கீதப் பாட விஷயத்தில் கமிட்டியார் தேசீயப் பாட்டுக்கள், கிராமியப் பாட்டுக்கள், பக்திக் கீதங்கள் முதலியவைகள் கூடிப் பாடப்படுவதை வற்புறுத்துகிருர்கள். இந்த அடிப்படையான கல்வியில் பையன்களுக்கு சாஸ்திர பூர்வமான சங்கீதம்

போதிப்பது சாத்தியமன்று என்று கருதுகிறார்கள். கைத்தொழில் வேலைகளுக்கு ஏற்றதாயும், தேகப் பயிற்சி நடவடிக்கைகளுக்குப் பொருத்தமானது மான சவுக்கமான மெட்டுக்களையுடைய பாட்டுக் களும் சங்கீதப் பாடத்தில் அடங்கி யிருக்கவேண்டு மென்று குறிப்பிட்டிருப்பது சங்கீதத்தையும் பாடங் களோடு இணைப்பதற்கு ஒரு உதாரணமாகும். இந்த முறையினால் பையன்களுக்குக் கைத்தொழிலில் அசிரத்தையும் அனாவசியமான களைப்பும் ஏற்படாம லிருக்கும்படி செய்யலாம். தேகப்பயிற்சி சங்கீதத் தோடு லயித்துச் செய்யப்படும் முறை மேல்நாடுகளில் இப்பொழுது சாதாரணமாகக் கையாளப்படுகிறது. சிரமமான வேலை செய்யும் கூலியாட்கள் தங்க ளுடைய உற்சாகத்திற்காக வேலை முறைக்குப் பொருத்தமான கிராமியப் பாட்டுக்கள் பாடுவதை நாம் சர்வ சாதாரணமாகப் பார்த்திருக்கிறோம்.

பாடத் திட்டத்திற்கும் போதனா முறைக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தை வற்புறுத்துவதற் காகவே இந்த உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன வென்றும், ஒவ்வொரு அம்சத்தைப் பற்றியும் இத்தகைய உதாரணங்கள் எவ்வளவோ குறிப்பிடலாம் என்றும் கமிட்டியார் கூறுகிறார்கள். பாடத் திட்டத்தை எந்த முறையில் கையாண்டால் புத்திசாலித்தனமான கூட்டுறவு மனப்பான்மை யுடைய சமூகத்தை நிறுவலாம் என்பதைக் காட்

டவே இந்த உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

---

## 17. தேச பாஷை

இந்தப் பாடத் திட்டத்தின் முக்கிய அம்சங்களில் ஒன்று ஹிந்தி. ஹிந்தியைக் கட்டாயப் பாடமாகப் பள்ளிக்கூடங்களில் வைப்பதற்குச் சில அரசியல்வாதிகள் ஆக்ஷேபம் கூறுவது ஒரு புற மிருக்க, சில கல்வி நிபுணர்கள், ஹிந்தியின் வருகையால் தாய் மொழிக்குப் பங்கம் ஏற்பட்டுவிடுமோ என்று பயப்படுவதில் சிறிதும் அர்த்தமில்லை. தேசத்திற்குப் பொதுப் பாஷை ஒன்று வேண்டும் என்ற நோக்கத்தோடு ஹிந்தி ஒன்றுதான் ஹிந்து முஸ்லிம் கலாசார ஒற்றுமைக்கு நன்ருய் அடிகோலுவது என்று திட்டத்தில் குறிப்பிட்டிருப்பது முக்கியமாய்க் கவனிக்கப்படவேண்டிய விஷயம். ஹிந்து முஸ்லிம் கலாசார சம்பந்தமாக ஏற்பட்ட இந்தப் பாஷையை நன்ருய் வளர்த்து தேசமுழுவதும் அந்தச் சம்பந்தம் நீடித்து இருக்குமாறு செய்துவிட்டால் வார்தா திட்டப் பிரகாரம் கல்வி பயின்ற தலைமுறையில் ஒரு பெரிய தேசீயப் பிரச்னை தானுகவே தீர்ந்துவிடும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒவ்வொருவருடைய கலாசாரத்தையும் நன்ருய் அறிந்து பரஸ்பர மரியாதையும் அன்பும் காட்ட முடியும். இந்த நோக்கத்திற்குத் தேசத்தின் நன்மையை மனதில் கொண்ட எந்த மனிதனும் ஆக்ஷேபம் கூற முடியாது.

பாடத் திட்டத்தில் ஹிந்தி எப்படிப்பட்ட ஸ்தானம் வகிக்கும், அதனுல் மற்ற பாடங்களுக்கு இடையூறு ஏற்படுமா என்று சந்தேகப்படுபவர்களுக்குத் திட்டத்தில் காணப்படும் குறிப்பே தக்க பதிலாகும். ஹிந்துஸ்தானி பள்ளிக்கூடத்தின் 5-வது 6-வது வகுப்புக்களில்தான் கட்டாயப் பாடமாக வைக்கப் படும். ஆகவே, ஆரம்பம் முதலே குழந்தைக்கு ஹிந்தியைப் புகட்டிப் பாடங்களை அனுவசியமாகக் கனக்கச் செய்வார்கள் என்ற பயத்திற்கு ஆதாரமில்லை. இந்த நாலைந்து வருஷத்திற்குள் பையனுக்குத் தாய் மொழியில் நல்ல பயிற்சி ஏற்பட்டுவிடும். வேறு பாஷையாகிய ஹிந்துஸ்தானியின் அக்ஷர பேதங்களையும், சப்த மாறுபாடுகளையும் அவன் சீக்கிரத்தில் எளிதாக அறிந்துகொள்ள முடியும். தவிர பாடத் திட்டத்தில் தாய்மொழிப் பயிற்சியின் மூலம் எந்த நோக்கங்க ளெல்லாம் எதிர்பார்க்கப்படுகின்றனவோ அவை யெல்லாம் ஹிந்துஸ்தானிப் பாடத்தினுலும் சித்தியாக வேண்டும் என்று குறிக்கப்பட வில்லை. தேசியப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்ற குழந்தைகள் எல்லோரும் தேச பாஷைப் பரிச்சயம் பெறவேண்டும். அவர்கள் வாழ்க்கையில் ஈடுபடும் போது தேசத்தின் பல பாகங்களைச் சேர்ந்தவர்களோடும் அளவளாவத் திறமை பெறவேண்டும். இது தான் ஹிந்துஸ்தானியைப் பாடமாக வைப்பதின் நோக்கம். இதிலிருந்தே தாய்மொழியை ஹிந்துஸ்தானி பாதிக்குமா என்பதையும், ஹிந்துஸ்தானிக் குப் பாடத் திட்டத்தில் கொடுக்கப்பட்ட ஸ்தானத்

த்தையும் அறியலாம். ஹிந்திப் புஸ்தகங்கள் ஹிந்தி எழுத்துக்களிலும் உருது எழுத்துக்களிலும் தயாரிக்கப்படவேண்டும் என்று விதித்திருப்பது, ஹிந்திப் பிரச்னையின் மூலம் வகுப்புவாதக் கிளர்ச்சி செய்யலாமா என்று யோசிப்பவர்களுக்குத் தக்க பதிலாகும்.

பாடத் திட்டத்தின் முக்கியமான அம்சங்களையும் அவைகளின் கோட்பாடுகளையும்தான் இது வரை பொதுவாகக் கவனித்தோம். பாடத் திட்டத்தின் நோக்கங்களை விரிவாக அனுபந்தத்தில் காணலாம். பாடங்கள் ஒன்றோடொன்று இணைக்கப்படுவதில் கையாளவேண்டிய முறை ஜாகிர் ஹுசேன் கமிட்டியின் இரண்டாவது அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு மேலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அங்கங்கே அந்தந்த அம்சங்களைப் பற்றிய ஆக்ஷேபணைகளும் சமாதானங்களும் கவனிக்கப்பட்டிருக்கின்றன. இதைத் தவிர இன்னும் சில ஆக்ஷேபணைகள் பாடத் திட்டத்தின் நேரத்தையும் பையன்களுடைய வயது முதலியவற்றையும் பற்றியனவாயிருக்கின்றன. அவைகளுக்கு ஜாகிர் ஹுசேன் கமிட்டி கொடுத்திருக்கும் பதிலைக் கீழே கவனிப்போம்.

---

## 18. பாடக் காலம்

பரந்த நோக்கமும் தாராள மனப்பான்மையும் விருத்தியாவதற்காக வகுக்கப்பட்ட இத் திட்டத்

தின் பிரகாரம் ஒரு நாளுக்கு $5\frac{1}{2}$ - மணி நேரம் கல்விக்காகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த நேரத்தை ஒவ்வொரு பாடத்திற்கும் விநியோகித்திருக்கும் அளவிலிருந்து இத் திட்டத்தில் ஒவ்வொரு பாடத்திற்கும் கிடைக்கும் முக்கியத்வத்தை அறியலாம். இதில் நடுநாயகமான அடிப்படையான கைத்தொழிலுக்கு $3\frac{1}{2}$ - மணி நேரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

கல்வித் திட்டம் முழுவதும் அடிப்படையான கைத்தொழிலை ஆதாரமாகக் கொண்டிருப்பதாலும், மற்ற பாடங்களெல்லாம் அதோடு இணைக்கப்பட வேண்டியதா யிருப்பதாலும், அந்தக் கைத்தொழிலுக்கு அதிக நேரம் கொடுக்கப்படுவது இயற்கைதான். ஆனல் $3\frac{1}{2}$ மணி நேரம் ரொம்பவும் அதிகம் என்று பலர் புகார் செய்கிருர்கள். இவ்வளவு நேரம் கைத்தொழில் பயிற்சிக்குக் கொடுக்கப்படுவதால் மற்ற பாடங்களுக்குஅவகாச மிருக்காதென்றும், கை கால்களைக் கொண்டு செய்யப்படும் வேலை சம்பந்தமான பயிற்சிக்கு இவ்வளவு நேரம் கொடுத்தால் குழந்தைகள் ரொம்பவும் சிரமப்படுவார்கள் என்றும் ஆக்ஷேபிக்கிருர்கள்.

மூன்றரை மணி நேரமும் பையன்கள் கைகளினல் சிரமப்பட்டு வேலை செய்து கொண்டிருக்க வேண்டும் என்ற தப்பெண்ணத்தினல் ஏற்பட்ட ஆக்ஷேபணைகள்தான் இவை. இந்தச் சந்தேகத்தை வார்தா கமிட்டியின் இரண்டாவது அறிக்கை

நிர்த்தி செய்திருக்கிறது. கைத்தொழிலுக்கு அதிக நேரம் கொடுப்பதால் படிப்பு எழுத்து வேலைகள் கெட்டுப் போய்விடுமென்ற பயத்துக்குக் காரணம் மூளை வேலைக்கும் சரீர வேலைக்கும் சம்பந்தமே கிடையாது என்ற எண்ணம்தான். இந்தக் கொள்கையை ஜாகிர் ஹுசேன் கமிட்டி ஒப்புக்கொள்ளவில்லை. ஆகவே, கைத்தொழிலுக்கு மூன்றரை மணி நேரம் கொடுக்கப்பட்டதின் காரணத்தை அவர்கள் பின்வருமாறு விளக்கியிருக்கிறார்கள்: "......கைத்தொழிலுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் நேரம் முழுவதும் நடைமுறையில் வேலை செய்வதில் மாத்திரம் செலவிடப் படவேண்டும் என்பது எங்கள் நோக்கமன்று, இந்த வேலையோடு சம்பந்தப்பட்ட கேள்வி, பதில், பயிற்சி, சித்திரப் பயிற்சி, கைத்தொழிலைப் பற்றி விவரித்து எழுதவோ பேசவோ பயில்வது போன்ற முயற்சிகளிலும், செய்யப்படும் வேலை முறையின் காரணம் பலன் முதலிய விஷயங்களைப் பற்றிய போதனையிலும் இந்த நேரம் செலவிடப் படவேண்டும். இந்த மாதிரியான தொழில் முறை நுணுக்கங்களை அறிந்துகொள்வது கைத்தொழிலின் கல்வி அம்ச விசேஷமாகும். இந்த விஷயம் பாட இணைப்பு விஷயமாகத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது."

தனிப்பட்ட மனிதர்களிட மிருந்துதான் இந்தப் பாடக் கால நிர்ணயத்திற்கு விசேஷ ஆக்ஷேபனைகள் கிளம்பி யிருக்கின்றன. இவ் விஷயத்தில்

சென்னை ஆசிரியர் சங்கத்தார் நியமித்த கமிட்டி வார்தா கமிட்டியின் விளக்கத்தை அங்கீகரித்திருப்பது குறிப்பிடத்தக்கது. கைத்தொழில் பாடத்திற்கு 3-மணி 20-நிமிஷம் கொடுத்திருப்பது, எவ்வளவு அதிக நேரம் கொடுக்கலாம் என்பதைக் குறிப்பிடும் முறையில் கொடுக்கப்பட் டிருக்கிறது. இந்தக் கால வரையறையை மீறக் கூடாது என்ற நோக்கத்தோடுதான் அந்த நேரம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சென்னை ஆசிரியர் சங்கக் கமிட்டியார் பொதுஜனங்களுக்கு ஞாபக மூட்டுகிறார்கள். "இதனால் தொழிலுக்கு மித மிஞ்சிய சலுகை கிடைத்து விடுமோ என்ற பயம் நீங்கிவிடும். தவிர, தொழிலுக்குக் கொடுக்கப்பட்ட கால எல்லைக்குள்ளேயே தொழிலோடு இணைக்கப்பட்ட பாடங்களிலும் போதனை நடக்கும் என்பதையும் கவனிக்க வேண்டும்" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

கைத்தொழிலுக்கு அடுத்தபடியாக அதிக நேரம் கொடுக்கப்பட்ட தனிப்பட்ட பாடம் தாய் மொழி. தொழில் சம்பந்தப்பட்ட இக் கல்வித் திட்டத்தில் பொது அறிவு விஷயத்தில் தாய்மொழிக்குத்தான் அதிகச் சலுகை என்பது தெரியவரும். தாய்மொழி இத்தகைய முக்கியத்வமும் விசேஷமும் அடைவதால் தொழிலுக்குப் பொருத்தமான பொது அறிவைக் கொடுப்பதோடு திட்டத்தில் தாய்மொழிப் பாடத்தினால் ஏற்படு மென்று எதிர்

பார்க்கப்படும் மற்ற நோக்கங்களும் பூர்த்தியாவதற்குச் சாதனமா யிருக்கும்.

ஒரு நாளுக்கு 5½-மணி நேரம் வீதம் வருஷத்திற்கு 288 நாட்கள் பள்ளிக்கூடம் நடக்கவேண்டுமென்று வார்தா திட்டத்தில் கண்டிருக்கிறது. இது அதிகம் என்று பலர் பல காரணங்களால் கருதுகிறார்கள். சென்னை ஆசிரியர் சங்கத்தின் கமிட்டி 220 நாட்கள் போதுமானவை என்று கருதுகிறது. அந்தச் சங்கத்தின் மகாநாட்டில் தலைமை வகித்த கொச்சி கல்வி டைரக்டர் ஸ்ரீ ஐ. என். மேனன் 200 நாட்களுக்குக் குறையாமல் பள்ளிக்கூடம் நடந்தால் போது மென்று கூறுகிறார். "இவ்வளவு நாட்களுக்கு மேல் 7-முதல் 14-வயது வரையுள்ள பையன்கள் லாபகரமாய் வேலை செய்ய முடியாது. சிரமம் பல விதத்திலும் தோன்றும். சிரத்தை யின்றி நடத்தப்படும் வேலை பயனற்றதாய்ப் போவதோடு கூட நல்ல போதனை முறைக்கே ஒரு முட்டுக் கட்டையாகவும் ஏற்படும்" என்று அவர் தமது தலைமை யுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

பையன்களுக்குச் சிரமம் தோன்றாமல் பாடங்களை நடத்திவிடலாம் என்ற நம்பிக்கைக்கு வார்தா திட்டத்தின் பாட இணைப்பு முறையில் இட மிருக்கிறது. என்றாலும், பள்ளிக்கூடம் என்ற ஒரு ஒழுங்கு முறை ஸ்தாபனத்திலேயே சில விதிகளுக்குட்பட்டு நடப்பதில் சிறு பையன்களுக்கு எப்பொழுதும் ஆசை யிருக்கு மென்று நாம் எதிர்பார்க்க முடி

யாது. இரண்டாவதாக, பையன்கள் தாங்கள் கற்றுக்கொள்ளும் விஷயங்களைத் தாங்களே தங்களுடைய சொந்த முயற்சியால் அநுபவ பூர்வமாய் விருத்தி செய்துகொள்ளுவதற்கு வேண்டிய வசதிகள் ஏற்படுவதற்கு அவகாசம் வேண்டும். வார்தா திட்டத்தின் மூலம் கல்வி சுற்றுப்புற வாழ்க்கையோடு பொருந்த இணைக்கப்படுவதால் நாளுக்கு நாள் வாழ்க்கையைக் கவனித்துப் பாடங்களையும் போதனு முறையையும் முன்னேற்ற முறையில் தயார் செய்து கொள்வதற்கு ஆசிரியர்களுக்கும் போதிய அவகாசம் வேண்டும். பள்ளிக்கூட வேலை ஒரு நிர்ப்பந்தம் என்ற எண்ணம் பையன்களுக்கோ ஆசிரியர்களுக்கோ ஏற்படாமலிருக்கத் தகுந்த விடுமுறை நாட்களும், ஆலோசனைக்கும், ஆராய்ச்சிக்கும், ஓய்வுக்கும் போதுமான கால வசதியும் இருக்க வேண்டியது அவசியம். இந்த விஷயங்களை உத்தேசிக்கும் பொழுது சென்னை ஆசிரியர் சங்கமும் அதன் மகாநாட்டுத் தலைவரும் குறிப்பிட்டபடி வருஷத்தில் பள்ளிக்கூட நாட்களின் எண்ணிக்கை குறைக்கப்படுவதை எல்லோரும் விரும்புவார்கள். திட்டம் சரியாக நடைபெறுவதற்கும் ஆசிரியர்கள் இணற்றுத் தவளைகள் ஆகாமல் பொதுவாழ்வில் சிரத்தையெடுத்துக்கொண்டு காலத்தின் தேவைகளை உணர்ந்து நடந்துகொள்வதற்கும் வசதி ஏற்படும்.

---

## 19. பள்ளி செல்லும் வயது

வார்தா திட்டத்தின் ஏழு வருஷக் கல்வி பையன்களுக்கு 7-வயது முதல் 14-வயது வரை கொடுக்கப்பட வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த வயது விஷயமாகவும் பல ஆக்ஷேபணைகள் கிளம்பியிருக்கின்றன. பையனை ஏழு வயதில்தான் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக்கொள்ளுவதென்றால் அதுவரை பையனை என்ன செய்வது என்ற பிரச்னையை ஆக்ஷேபணைகளுக்கு ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள். இதற்குக் காரணம் நம் தேசத்தில் குழந்தைக் கல்விக்கு வேண்டிய வசதிகள், அதாவது, பையனைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கு முன் அவனுடைய மனோ ந்யாய விருத்திக்குச் சாதனமான விஷயங்களைப் போதிப்பது சம்பந்தமான வசதிகள் அதிகம் இல்லாமற் போனதுதான். பையனை இன்னும் முன்னதாகவே—ஏழு வயதுக்கு முன்னதாகவே—பள்ளிக்கூடத்தில் சேர்த்துக் கொள்ளுவதற்குச் சரியாக வயது வரையறை நிர்ணயிக்கப்பட வேண்டும் என்று சிலர் கருதுகிறார்கள்.

இந்தப் பிரச்னையைப் பற்றி வார்தா கமிட்டியின் இரண்டாவது அறிக்கையில் பின்வரும் விளக்கம் காணப்படுகிறது:

"........கல்வி ஏழு வயதில் ஆரம்பிப்பது அதிகத் தாமதம் என்று வாதிக்கப்படுகிறது. பள்ளிக்கூடத்தில் சேருவதற்கு முன் பையன்களுக்குக் குழந்

தைக் கல்வி போதிப்பது அவசியம்; இந்தக் கல்வி முறை சாத்தியப்பட்ட போது சர்க்கார் உதவியோடு பொதுஜனங்களால் நடத்தப்பட வேண்டும் என்பதைத் திட்டத்தில் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறோம். ஆனல் தற்போதைய நிதி வசதி விஷயங்களை உத்தேசித்து, குழந்தைக் கல்வியை எங்களுடைய திட்டத்தின் ஒரு பகுதியாக நாங்கள் எடுத்துக் கொள்ளவில்லை. மேலும், பையன் பதினன்கு வயது அடையும்வரை பள்ளிக்கூடத்தில் இருப்பது அவசியம் என்று நாங்கள் கருதியதால்தான் 7—14 வயது வரையறை நிர்ணயித்திருக்கிறோம். அப்படி 14-வயது வரையில் பள்ளிக்கூடத்தில் இருந்தால்தான் பையன் சமூக வாழ்வுக்குத் தேவையான பயிற்சியைப் பெறமுடியும். மனேதத்துவ காரணங்களால் இந்தப் பயிற்சியை அவன் 14-வயதுக்கு முன் அடைய முடியாது. அதோடு பதினன்கு வயது அடையும்போது அவனுக்கு எழுத்தறிவு நன்ருய்ப் பதிந்துவிடும். அதை மறப்பதற்குச் சந்தர்ப்பம் நேரிடாது. தான் பள்ளியில் கற்ற கைத்தொழிலையே அவன் வாழ்க்கைக்கு ஆதாரமாகக் கொண்டாலும் பதினன்கு வயது வரை கற்ருல்தான் அத் தொழிலை வெற்றிகரமான வாழ்க்கைத் துணையாகக் கொண்டு நடத்துவதற்குத் தேவையான திறமை ஏற்படும். வயதடையும் காலத்தில் கல்வி கற்கும் வசதிகளைப் பற்றி நாங்கள் திடமான நம்பிக்கை கொண்டிருக்கிறோம். ஆகையால் பையன் பள்ளிக்கூடத்தில்

இருக்கும் காலத்தை நீடிக்க முடியுமானால் நாங்கள் 16-வயதுவரை கூட பையன் பள்ளிக்கூடத்தில் இருக்க வேண்டுமென்று சொல்லுவோம். அப்பொழுதுதான் ஒழுக்கம், சமூக வாழ்வு முதலியவற்றில் அவன் சரியான தேர்ச்சி பெற முடியும்."

பள்ளிக்கூடம் சேருவதற்கு முன் குழந்தைகளுக்கு வேறு திட்டத்தின் மூலம் கல்வி போதிக்கப் படவேண்டியது அவசியம் என்பதைக் கல்வி முன்னேற்றத்தில் சிரத்தை கொண்டுள்ளவர்கள் எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். இதுவரை இம்மாதிரியான கல்விக்காகப் பெரிய முயற்சி ஒன்றும் செய்யப்படவில்லை. வார்தா திட்டத்தினால் இது அவசியமாகிறது. ஏழு வயதுக் குட்பட்ட குழந்தைகளுக்குக் கைத்தொழில் பூர்வமான கல்வி போதிப்பது சாத்திய மாகாத காரியம் என்பதனால்தான் ஏழு வயதுக்குப் பிறகு ஆரம்பிக்க வேண்டும் என்று வார்தா திட்டம் சொல்லுகிறது. திட்டத்தை விளக்கும் போது கமிட்டியார் சொல்வதுபோல், 14-வயதுக்கு முன் பையனைப் பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்திவிட்டால் போதிய பொது அறிவு கிடைக்காமல் போய்விடும். தவிர, ஏழு வருஷங்களுக்குக் குறைந்த காலத்தில் இந்த அடிப்படையான கல்வியைச் சரிவரப் போதிக்கவும் முடியாது. இந்த விஷயங்களை யெல்லாம் உத்தேசிக்கும் போது கல்வியின் ஆரம்ப வயதைக் குறைப்பதில் அதிகப் பயன் கிடைக்காதென்றே தெரிகிறது.

வார்தா திட்டத்தினுல் இப்பொழுது அவசியமா யிருக்கும் குழந்தைகள் கல்வியைப் பற்றிய திட்டம் ஒன்று இந்த அடிப்படையான கல்விக்குத் தக்க படி தயாரிப்பதுதான் நல்லது. அப்படி ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு, குழந்தைக் கல்வி ஸ்தாபனங் கள் ஏற்பட்டால் ஏழு வயது வரை பையனை வீட்டில் வைத்துக்கொண்டு என்ன செய்வது என்ற பிரச்னை தீர்ந்துவிடும். இரண்டு வருஷ காலம் குழந் தைக்கு மனோ காய விருத்திச் சாதனங்கள் ஏற் படுத்தி வார்தா பள்ளிக்கூடத்திற்குத் தயார் செய்ய லாம்.

அல்லது இத் திட்டத்திலேயே முன்னதாக ஒரு வருஷத்தைச் சேர்த்து இரண்டாவது வருஷத்தில் ஆரம்பிக்கப் போகும் கைத்தொழில் படிப்புக்கு முதல் வருஷத்தைப் பயிற்சி ஸ்தலமாக வைத்துக் கொள்ளலாம்.

அடிப்படையான கல்வித் திட்டத்தை மாத் திரம் தயாரிக்க முன்வந்ததால் வார்தா கமிட்டியார் தாங்கள் உயர்தரக் கல்வியைப் பற்றி இதன் சம் பந்தமாகக் கவனிக்கவில்லை என்று சொல்லியிருக் கிறார்கள். அப்படி யிருந்தும், வார்தா திட்டத்தில் உயர்தரக் கல்வியைப் பற்றி ஏன் ஒரு வார்த்தை கூடக் காணவில்லை என்று சிலர் கேட்கிறார்கள். ஒரு தேசீயக் கல்வித் திட்டத்தில் அடிப் படைக் கல்வி மட்டு மல்லாது மற்றும் உயர்தரக் கல்விக்கும் இடமிருக்க வேண்டும் என்று சென்னை

ஆசிரியர் சங்கம் வற்புறுத்துகிறது. ஆகவே, ஏழு வயதுக்கு முன் குழந்தைகளுக்குக் கல்விச் சாதனம் அளிப்பதன் அவசியத்தைப் போலவே உயர்தரக் கல்வியும் அவசிய மடைகிறது. வார்தா திட்ட அடிப் படைக் கல்விக்குத் தக்கவாறு உயர்தரக் கல் வியையும் சீர்திருத்தி அமைக்க ஒரு திட்டம் வகுத் தால் ஒரே நோக்க முள்ள தேசியக் கல்வி யைய னுடைய கல்வி வாழ்க்கை முழுவதற்கும் உதவும். ஆனல் இப்பொழுது கவனிக்கப்படுவது அடிப் படைக் கல்வி யாதலால் வார்தா கமிட்டியார் வகுத்த திட்டம்தான் மற்றவைகளுக்கும் நல்ல ஆதாரமா யிருக்க முடியும்.

---

## 20. சிறுவனும் சிறுமியும்

வார்தா திட்டத்திற்கு ஏற்பட்ட இன்னு மொரு விசேஷ எதிர்ப்பு ஸ்திரீகளிடமிருந்து வந்திருக்கிறது. இந்திய மாதர் சங்கத்தில் பெரு மையான ஸ்தானம் வகிக்கும் ஸ்ரீமதி **மார்கரேட் கஸின்ஸ்** இத் திட்டத்தைப் பற்றிப் பலமாகக் குறை கூறியிருக்கிறார். காரணம் திட்டத்தில் பெண்களைப் பற்றி ஒன்றுமே சொல்லப்படவில்லை யாம். திட்டம் முழுவதும் 'பையன்' 'பையன்' என்றுதான் கண்டிருக்கிறதாம். 'பெண்' என்று ஒரு வார்த்தை கூடக் கிடையாதாம். பெண்களுக்கு வேறு திட்டம் வேண்டுமென்பது அவர் கொள்கை.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம உரிமைகளும் சந்தர்ப்பங்களும் வேண்டும் என்று கேட்கப்படும் இக்காலத்தில் பாவம் சிறு குழந்தைப் பருவத்திலேயே கல்வியில் திட்டம் வேறு வேருக எப்படி வகுப்பது என்பதுதான் தெரியவில்லை. தவிர, ஸ்ரீமதி கஸின்ஸின் புகாருக்குத் தக்க ஆதாரமிருக்கிறதென்றும் சொல்வதற்கில்லை. பத்து வயது வரையில் பையன்களுக்கும் பெண்களுக்கும் பிரமாத வித்தியாச முள்ள கல்வித் திட்டம் ஒன்றும் விசேஷமாக வகுத்துவிட முடியாது. பத்து வயதுக்கு மேற்பட்ட பின் பெண்களுக்குப் பிரத்தியேகப் பாட விஷயங்கள் போதிக்கப்பட வேண்டியது அவசியம்தான். இதற்காக வார்தா கமிட்டியார் தங்களுடைய பாடத் திட்டத்திலேயே இவ் விஷயத்தைக் குறிப்பிட்டிருக்கிருர்கள். ஐந்தாவது வருஷம் வரை பாடத் திட்டம் சிறுவருக்கும் சிறுமியருக்கும் ஒன்ருகத்தான் இருக்கும். நான்காவது ஐந்தாவது வருஷங்களில் ஸயன்ஸ் பாடத்தில் குடும்ப நிர்வாக சாஸ்திரப் பாடங்கள் சேர்க்கப்பட வேண்டும். கடைசி இரண்டு வருஷங்களில் பெண்களுக்கு அடிப்படையான கைத்தொழிலுக்குப் பதிலாகக் குடும்ப சாஸ்திரத்தில் அதிகத் தேர்ச்சி கொடுக்கக்கூடிய பாடங்கள் போதிக்கப்படும் என்று திட்டத்தில் கண்டிருக்கிறது. 14 வயதுக் குட்பட்ட சிறுவர் சிறுமியர்களுக்குப் போதிக்கப்படும் பாடங்களில் இதைவிட வேறு முறையில் பேதம் ஏற்படுத்துவது சாத்தியமென்று சொல்ல முடியாது. சிறுமிகளுக்கு இதைவிட

வேறு விசேஷமான பாடங்கள் இப்பொழுது பெண்கள் பாடசாலைகளில்கூடப் போதிக்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. "அடிப்படைக் கல்வித் திட்டத்தில் சிறுவர் சிறுமியர் சேர்ந்து படிக்கும் விஷயமாக, பெற்றோர்கள் இஷ்டப்பட்டால் 12-வது வயதிலேயே பெண்கள் கல்வியை நிறுத்திவிடலாமென்று கூறியிருப்பதால், ஆண் பெண் இருவருக்கும் பொதுக் கல்வி கொடுக்கும் விஷயமாகக் கடுமையான ஆக்ஷேபணைகள் இருக்காவென்றே நாங்கள் நம்புகிறோம். சிக்கனத்தை உத்தேசித்தாலும் இக் கொள்கை நியாயம் என்று தெரியும்" என்று சென்னை ஆசிரியர் சங்கக் கமிட்டியின் அறிக்கையில் கூறியிருக்கிறார்கள். இந்தக் கமிட்டியில் இரு மாதர்களும் அங்கத்தினர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

வார்தா திட்டத்தின் நோக்கங்களையும் கோட்பாடுகளையும், பாடத் திட்ட விஷயங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் பொதுஜனங்கள் அறியும் பொருட்டு இதுவரை கவனிக்கப்பட்டது. அந்தந்த அம்சம் சம்பந்தப்பட்ட மட்டில் ஆக்ஷேபணைகளும் சமாதானமும் சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு குறிப்பிட முயற்சி செய்யப்பட்டது. வார்தா திட்டத்தின் கடைசிப் பகுதியாகிய நிர்வாக விஷய நுணுக்கங்களைப் பற்றி இப்பொழுது விளக்க வேண்டிய அவசியமில்லை. நிர்வாக அம்சங்கள் பின்னுள்ள கமிட்டி அறிக்கையில் காணப்படும்.

அநுபந்தம்

## வார்தா கமிட்டி அறிக்கை

1937, அக்டோபர் 23உ யன்று, வார்தாவில் மகாத்மா காந்தியின் தலைமையில் கூடின கல்வி மகாநாட்டின் முடிவில், கல்வித் திட்டம் பற்றி ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்கு டாக்டர் ஜாகிர் ஹுசேன் தலைமையில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அக் கமிட்டி மகாத்மா காந்திக்குச் சமர்ப்பித்த அறிக்கை:

தற்போது இந் நாட்டிலிருக்கும் கல்வி முறையை இந்தியாவில் எல்லோரும் ஏக மனதாகக் கண்டிக்கிறார்கள். கடந்த காலத்தில் இக் கல்வி முறை தேசீய வாழ்வின் முக்கியமான தேவைகளைப் பூர்த்தி செய்யவில்லை; தேசத்தின் வேகத்தையும் போக்கையும் சரியான பாதையில் செலுத்தத் தவறி யிருக்கிறது. தேசீய வாழ்விலும், சர்வ தேசீய வாழ்விலும் பெரிய மாறுதல்கள் வேகமாக ஏற்பட்டு வரும் இக்காலத்திலும், தேசப் பிரஜைகளிடமிருந்து பல குண விசேஷங்கள் எதிர்பார்க்கப்படும் இக்காலத்திலும், பழைய கல்வி முறை, உண்மையான வாழ்க்கைப் பிரச்னைகளுக்குச் சம்பந்தமற்ற முறையில், புதிய நிலைமைகளுக்கேற்றவாறு தன்னைச் சீர்பெற அமைத்துக் கொள்ளாமல், ‘ தான் போன போக்காக ’ நடந்துவருகிறது. உயிரூட்டும் லக்ஷிய வேகமோ, உண்மைப் பிரச்னைகளின் தொடர்போ இல்லாமல் உயிரற்றுப் போய்விட்டது. மக்களைச் சரியான பிரஜைகளாக

வும், சமூகத்துக்குப் பயனுள்ளவர்களாகவும் ஆக்கும் துறையில் அக் கல்வி முறை எவ்விதப் பயிற்சியும் அளிக்கா திருக்கிறது. போட்டி, பலாத்காரம், பொருளாதாரச் சுரண்டல் இவற்றைத் தொலைத்துக் கூட்டுறவு மனப்பான்மையை அடிப்படையாய்க் கொண்ட சமூக தர்மத்தை ஏற்படுத்துவதற்கு உதவி செய்வதே கல்வியின் தொண்டு என்ற உணர்ச்சியோ, அப் பொறுப்பின் தன்மையைப் பற்றிய திருஷ்டியோ தற்காலக் கல்வி முறையில் இல்லை.

ஆகையால், தற்காலக் கல்வி முறையை மாற்றிச் செயல் முறையில் நல்ல பயனளிக்கத் தக்க ஒரு கல்வியமைப்பு ஏற்பட வேண்டும் என்று, எல்லோரும் கோருகிறார்கள். புதிதாக ஏற்படும் கல்வி முறையானது, தேசீய வாழ்க்கையின் தேவைகளையும் லட்சியங்களையும் பூர்த்தி செய்வதாய், சமூகத்தின் அவசரமான கோரிக்கைகளைப் பூர்த்தி செய்வதாய், இருக்கவேண்டு மென்று எல்லோரும் விரும்புகிறார்கள்.

இந்தியக் குழந்தைகளுக் கென்று தயாரிக்கப் படும் எந்தக் கல்வித் திட்டமும், சில விஷயங்களில் மேல் நாட்டுத் திட்டங்களிலிருந்து மாறுபட்டதாகவே இருக்கும். ஏனெனில், மேனாடுகளைப் போலல்லாது இந்தியா அஹிம்சையையே எல்லாத் துறைகளிலும் விடுதலை மார்க்கமாகக் கொண்டிருக்கிறது. ஆகையால் நம் சிறுவர்களுக்கு அஹிம்

சையின் சிறப்பை—பலாத்காரத்தைவிட அஹிம்சையே சிறந்த தென்பதை—போதிப்பது அவசியமாகிறது.

## காந்திஜீயின் கருத்து

வேறு பல துறைகளைப் போலவே இத் துறையிலும், இந்த நெருக்கடியான சமயத்திலும்,மகாத்மா காந்தி தீர்க்க திருஷ்டியுடன் வழி காட்ட வந்திருக்கிறார். இந்திய மக்களின் மனோபாவத்துக்கும் மனப்பக்குவத்துக்கும் பொருத்தமான முறையில் ஒரு கல்வித் திட்டத்தை வகுக்கும் பிரச்னையில் அவர் கருத்தைச் செலுத்திவிட்டார். மிகக் குறைந்த காலத்தில் காரிய சாத்தியமான முறைகள் மூலம் பொதுஜனக் கல்வியைப் பெருக்குவதற்குத் திட்டம் போடும் பிரச்னையில் அவர் கவனம் செலுத்திவிட்டார். 'ஹரிஜன்' பத்திரிகையிலும் வார்தா கல்வி மகாநாட்டிலும் அவர் விளக்கிக் காட்டின கல்வித் திட்டத்தின் அடிப்படைத் தர்மம் யாதெனில், "கல்வி சரியான கொள்கைகளின்படி போதிக்கப்படுவதாயின் பொருளுற்பத்தி செய்யும் ஒரு உழைப்பின் மூலமே போதிக்கப்படுதல் வேண்டும்" என்பது. பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் எல்லா விஷயமும் ஏதாவது ஒரு தொழிலுடன் சம்பந்தப்பட்ட உண்மைகளாக இருக்க வேண்டும். ஏதாயினும் ஒரு தொழில் திறமையுடனும், பூர்ணமாகவும் போதிக்கப்படுவதாயின், அதன் மூலமே போதகாசிரியரின் சம்பளமும் கிடைத்துவிடும். உடனே கட்டாய இல

வசக் கல்வித் திட்டம் ஏற்படுத்துவதற்கு இதன் மூலம் சர்க்காருக்கு உதவி செய்ய முடியும். இப்படி ஒரு முறை இல்லையாயின் தேசத்தின் இப்போதைய நிலைமையில் கல்வியின் செலவு சமாளிக்க முடியாத விஷயமாக இருக்கிறது.

### இதிலுள்ள நன்மைகள்

உற்பத்திக்குக் காரணமாயுள்ள ஒரு உபயோகமான தொழில் மூலம் சிறுவர்களுக்கு அறிவு புகட்டுவது என்ற முறை பொதுப்படையாகக் கல்வி முறைகளில் தேர்ந்த அறிவாளரால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. வாழ்க்கையில் எல்லா அம்சங்களின் தேவையையும் சமாளிக்கும் முறையில் கல்வி யறிவு போதிக்கப்படுவதற்கு இது நல்ல உபாயம் என்பது பொதுவாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

### குழந்தைகளின் ஆரோக்கிய வளர்ச்சி

தேகாரோக்கிய சம்பந்தமாகப் பார்த்தாலும் இந்த முறை விரும்பத் தக்கதே. வெறும் ஏட்டுச் சுரைக்காயான சித்தாந்தங்களைப் போதித்தால் குழந்தைகள் ஏதோ துன்பத்துக் காளாவது போலவே நினைக்கிறார்கள். அவர்களது இயற்கை யமைப்புக்கு அது பிடிப்பதில்லை. இந்தக் கொடுமை யுணர்ச்சியி லிருந்து குழந்தைகளைக் காப்பாற்றுவதற்குத் "தொழில் மூலம் கல்வி போதிப்பது" மிகவும் நல்லது. மூளையில் வளர்ச்சி, அநுபவப் பெருக்கு, இரண்டையும் ஒன்றோ டொன்று பொருந்த வைப்பதற்கு

இம் முறை உதவியா யிருப்பதோடு, மனதும் உடலும் ஏக காலத்தில் பயிற்சி பெறுவதால் குழந்தைகள் வெறும் எழுத்து வாசனையோடு நின்றுவிடுவதில்லை. அச்சிட்ட எழுத்தைப் படிப்பதன்று கல்வியறிவின் லக்ஷியம். கையையும் மூளையையும் பயன்பெற உபயோகிப்பதே கல்வி யறிவின் லக்ஷியம். இந்தக் கல்வி முறையைக் குறிப்பதற்கு ஏதாவது ஒரு வார்த்தை சிருஷ்டிப்பதாயின் **பூர்ண மனிதத்வ கல்வி யறிவு** என்று சொல்லலாம்.

சமூகத் தேவை

சமூக அமைப்பு சம்பந்தமான தேவைகளைக் கொண்டு இத் திட்டத்தைப் பரிசீலனை செய்வோம். தேசத்தின் குழந்தைகளெல்லோருமே உற்பத்திக்கான உழைப்பின் மூலம் கல்வி பெறுகிறார்கள் என்று ஏற்படும்போது சரீர உழைப்புக்கும் மூளை உழைப்புக்கும் ஏதோ உயர்வு தாழ்வு வேற்றுமை இருப்பதாகத் தற்காலம் பொதுப்படையாகச் சமூகத்திலுள்ள மனக் கோளாறு ஒழிந்துபோகும். உழைப்பின் உயர்வும், மனித சமூகத்தின் கூட்டுறவு உணர்ச்சியும் எல்லோர் மனத்திலும் நன்கு படியும். இதனால் தேசத்தின் ஒழுக்கத்திலும் நீதி தர்ம உணர்ச்சியிலும் ஏற்படும் லாபம் மிகவும் முக்கியமானதாகும்.

பொருளாதாரத் தேவை

பொருளாதாரப் பிரச்னைகளைக் கருத்தில் கொண்டு இக் கல்வித் திட்டத்தைப் பரிசீலனை செய்வோம் :—

இத் திட்டம் விவேகத்துடனும், திறமையுடனும் அமுல் நடக்குமாயின் நம் தேசத்துத் தொழிலாள ரின் உற்பத்தித் திறன் அதிகரிக்கும். ஓய்வு நேரத் தை நன்கு பயன்படுத்தவும் அவர்கள் தெரிந்து கொள்வார்கள்.

கல்விப் பிரச்னையாகப் பார்த்தல்

கல்வி யறிவு என்ற ஒரே திருஷ்டியுடன் கவனித் தாலும் பயனுள்ள ஒரு தொழிலை அடிப்படையாகக் கொண்டு போதிக்கக்கூடும் அறிவு, பிரத்தியக்ஷ மான அநுபவத்தின் மூலம் போதிக்கப்படுவதால் காரிய உணர்ச்சியுடன் பொருந்தியதாக அமையும். அறிவுக்கும் வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கும்.

இரண்டு முக்கிய நிபந்தனைகள்

மேலே விவரிக்கப்பட்ட அநுகூலங்கள் சித் திக்க வேண்டுமானல் இரண்டு விஷயங்கள் கவன மாகக் கருத்துடன் அநுஷ்டிக்கப்படவேண்டும்.

ஒன்று: போதிப்பதற்கு எடுத்துக் கொள்ளப் படும் தொழில், கல்வி யறிவு போதனைகளுக்கு ஏரா ளமான சந்தர்ப்ப மளிப்பதாக இருக்க வேண்டும். மனிதரின் பல முயற்சிகளுக்கும் அத் தொழிலுடன் நெருங்கிய சம்பந்தம் ஏற்படுவதாக இருக்க வேண் டும். இரண்டு: பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படும் எல்லா அறிவு விஷயப் பிரிவுகளுக்கும் அத் தொழி லில் தொடர்பு இருக்க வேண்டும்.

இவ் வறிக்கையின் பிற்பகுதியில், எந்தத் தொழில்கள் அடிப்படைத் தொழில்களாகப் போதிக்கப் படலா மென்பது பற்றிச் சிபார்சு செய்திருப்பதில் இந்த முக்கியமான தேவைகளைக் கருத்தில் வைத்தே சிபார்சு செய்திருக்கிறோம். இக் கருத்துக்கள் முக்கியமானவை. கல்வித் திட்டத்தில் சிரத்தையுள்ளவர்கள் இப் பகுதியை நன்கு கவனிப்பார்களாக.

நோக்க மென்ன ?

இப் புதிய கல்வித் திட்டத்தின் முக்கிய நோக்கம், யந்திரத்தைப் போலச் சில பொருள்களை உற்பத்தி செய்யக்கூடிய திறமையான தொழிலாளரைச் சிருஷ்டிப்பதன்று.

செய்யும் கைத்தொழிலுடன் இணைப்புற்றுக் காணப்படுகிற கல்வி வசதியைப் பூர்ணமாகப் பயன் படுத்துவதே இக் கல்வித் திட்டத்தின் நோக்கம்.

ஆகையால், பள்ளிக்கூடத்திலுள்ள கைத் தொழில் வேலையானது பாடத் திட்டத்தின் ஒரு அம்சமாக இருப்பது மட்டு மல்லாது மற்ற விஷய அறிவைப் போதிப்பதிலும் இவ் வடிப்படைத் தத்துவமே போதனை முறையிலும் காணப்பட வேண்டும்.

கூட்டுறவு முயற்சி, திட்டங்கள் போடுதல், தொழில் நுணுக்கம், ஒன்றைப் புதிதாக ஆரம்பிக்கும் துணிவு, பொறுப்பு இக் குணங்கள் யாவும் முக்கியமாக மதிக்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு தொழிலும் இப்பொழுது போலக் கண்மூடித்தனமாக யந்திரம்போலச் செய்யப்படா

மல் சாஸ்திரீக உணர்ச்சியுடன் நுட்ப அறிவுடன் போதிக்கப்பட வேண்டும்.

"ஒரு தொழிலில் ஏன் இதை இவ்வாறு செய்கிறோம் என்ற அறிவு ஏற்படவேண்டும்" என்று மகாத்மா காந்தி கூறுவதன் கருத்து இதுவே யாகும்.

இப்போதுள்ள பள்ளிக்கூடத்துப் பாட ஜாபிதாவில் ஏதாவது ஒரு தொழிலையும், உதாரணமாக நெசவு தச்சு வேலை முதலியவற்றைச் சேர்த்துவிட்டு, மற்றெல்லாப் பாடங்களையும் முன்போலவே போதிப்பதா யிருந்தால், இத் திட்டத்தின் நோக்கமே தொலைந்துவிடும். தொழிற் பயிற்சி வேறு, கல்வி யறிவு வேறு என்ற வேற்றுமையை ஒழிப்பதே வார்தா திட்டத்தின் முக்கிய நோக்கம்.

## சமுதாய உணர்ச்சி

இத் திட்டத்தில் வேலை செய்ய முன்வரும் உபாத்தியாயர்களும் கல்வி நிபுணர்களும், சமுதாயத்தின் பிரஜைகள் என்ற ஹோதாவில் மக்கள் கைக்கொள்ள வேண்டிய லட்சியங்களைப் பற்றி இத் திட்டத்திலுள்ள தத்துவங்களை மனத்தில் உணருவது அவசியம். இந் நாட்டின் சமூக வாழ்வு, அரசியல் வாழ்வு, பொருளாதார வாழ்வு, கலாசாரம் எல்லாவற்றிலும் ஜனநாயகத் தன்மை ஏற்பட்டே தீரும். ஆகையால் புதிய தலைமுறையி லுள்ளவர்கள் தமது பிரச்னைகளையும், உரிமைகளையும், பொறுப்

புக்களையும் தெரிந்துகொள்ளச் சந்தர்ப்ப மளிக்க வேண்டும். சமுதாயப் பிரஜா உரிமைகளையும், பொறுப்புக்களையும் உணரும் அவசியமான அளவு கல்வியாவது புதிய கல்வித் திட்டத்தில் எல்லோருக்கும் கிடைக்க வேண்டும். இரண்டாவதாக, விவேக முள்ள ஒவ்வொரு பிரஜையும் தன் சமுதாயத்தின் காரியங்களில் செயலுடன் கலந்து கொள்பவனாக, சமூகத்துக்குத் தன் தொண்டுகளை நல்குதல் அவசியம். பணக்காரராயினும் சரி, ஏழையாயினும் சரி சமூகத்துக்குப் பாரமாகப் பிறர் உழைப்பில் வாழ்பவனாக யாரும் இருக்கலாகாது. பரசிரம ஜீவிகளைச் சிருஷ்டிக்கும் எந்தக் கல்வி முறையும் வெறுப்புக்கே உரியது. அந்தக் கல்வி முறையானது, சமூகத்தின் செல்வ உற்பத்தியையும் திறமையையும் சிதைப்பது மட்டு மல்லாமல், ஆபத்து நிறைந்ததும் நீதி தர்மத்துக்கு மாறுபட்டதுமான ஒரு மனப்பான்மையைச் சிருஷ்டித்துவிடும். அந்தக் கல்வி முறை வெறுப்புக்கே உரியது.

வார்தா கல்வி முறையானது, எந்தத் தொழிலும்-சாக்கடை வாரும் தொழில் உள்பட-கௌரவமுள்ளதே யென்று நினைக்கும் தொழிலாளரைத் தயாரிக்கும். இத் திட்டத்தில் பயிற்சி பெற்றவர்கள் பிறர் மீது பாரமாக வாழ்வதில் விருப்பற்று, தன்னம்பிக்கையுடன் வாழ்வதில் பிரியம் கொள்வார்கள். அந்த உத்தேசத்துடனேயே இத் திட்டம தயாரிக்கப்படுகிறது.

## பிரஜா தத்துவம்

பள்ளிக்கூடத்தில் செய்யும் வேலைக்கும், வெளியே சமூகத்தில் நடக்கும் வேலைக்கும் இவ்வாறு நெருங்கிய சம்பந்த மிருப்பதால், பள்ளிக்கூடத்தில் மாணவர்கள் பெற்ற பயிற்சியும் மனப்பான்மையும் எளிதில் சமூகத்தில் பரவுவதற்கு வசதியாகிறது. ஆகவே எங்களது இந்தப் புதிய திட்டம், பிற்காலத்துப் பிரஜைகளுக்கு ஒரு சொந்தக் கௌரவ உணர்ச்சியைத் தருவது மட்டு மல்லாமல், தாமாகவே தம் வாழ்க்கையை உயர்த்திக்கொள்வதிலும் கூட்டுறவு முறையிலுள்ள சமுதாயத்தில் சமூக சேவை செய்வதிலும் பற்றுதல் ஏற்படுத்துகிறது.

குழந்தைகளின் மனது பண்பு பெறுவதற்கு ஏற்றதான இளம் வயதில் சமூக சேவை உணர்ச்சியும் கூட்டுறவு சமுதாய லட்சியமும் அவர்கள் மனத்தில் படியும்படி செய்யவேண்டு மென்பதும் இக் கல்வித் திட்டத்தின் உத்தேசமாகும்.

மாணவர்கள் கல்வி பயிலும் காலத்தில் அவர்கள் தேசீயக் கல்வி வளர்ச்சிக்கு நேரில் தொண்டு செய்வார்கள். இவ் வுணர்ச்சியின் பெருமையும் அவர்கள் மனத்தில் தோன்றும்.

## செலவுக்கு வருவாய்

"கல்வியின் செலவு கல்வியின் மூலமே மீட்கப்படும்" என்பது வார்தா திட்டத்தில் ஒரு அம்சம். இதைப் பற்றித் தப்பெண்ணங்கள் ஏற்பட்டிருப்ப

தால் உண்மைக் கருத்தை விளக்கிச் சில வார்த்தைகள் கூறுவது அவசியமாகிறது.

வார்தா மகாநாட்டில் தயாரிக்கப்பட்ட கல்வித் திட்டம் மொத்தத்தில் சரியான திட்டமே என்ற எங்களது முடிவான அபிப்பிராயத்தை முதலில் தெளிவாகச் சொல்லிவிடுகிறோம். அந்தத் திட்டம் "செலவை மீட்கத் தக்க" திட்டமன்று என்றே ஏற்பட்டாலும் கூட, தேசீயப் புனருத்தாரணத்துக்கு அந்தக் கல்வி முறைதான் சிறந்தது. அந்தச் சிறந்த கல்வி முறையால் அதன் செலவையும் மீட்கும் முறையில் வருமானம் வருமாயின் அது அக் கல்வி முறையில் ஒரு அதிகப்படியான நன்மை. வார்தா கல்வித் திட்டத்தை நடத்திவைப்பதில் கல்விச் செலவை மீட்க முடியுமா வென்பதை இந்த அறிக்கையின் இறுதியில் (அநுபந்தமாகப்) புள்ளி விவரங்களுடன் காட்டியிருக்கிறோம். நூல் நூற்பதும் நெய்வதும் அடிப்படைத் தொழிலாக வைத்துக் கல்வி போதிக்கப்படுமாயின் தொழிலின் மூலம் கிடைக்கும் வருமானம் கல்விச் செலவில் எவ்வளவு பகுதியைச் சமாளிக்க உதவுகிற தென்பது அநுபந்தத்தில் காட்டப்பட்டிருக்கிறது.

குறிப்பிட்ட இந்தத் தொழில் (நூற்பதும் நெய்வதும்) சம்பந்தப்பட்ட மட்டில், புள்ளி விவரங்கள் தயாரிப்பதில் எங்களுக்குச் சிரமமே யில்லை. ஏனென்றால் சென்ற 17 வருஷ காலமாக மகாத்மா காந்தியின் மேற்பார்வையில் இந்த முறையில்

நிபுணத்துவம் நிறைந்த முயற்சி நடைபெற்றிருக்கிறது. இத் தொழிலில் உழைப்புக்கு ஊதியம் கணக்கிடுவதில், அகில பாரத சர்க்கா சங்கத்தார் சமீபத்தில் நிச்சயித்துக்கொண்ட ஊதிய விகிதப்படி கணக்குப் போடப்பட்டிருக்கிறது. மற்ற தொழில்களில் தற்காலம் மார்க்கெட்டிலுள்ள சாதாரண விகிதப்படி கணிக்கப்படடிருக்கிறது.

பள்ளிக்கூடங்களில் சிறுவர்கள் தயாரிக்கும் பொருள்களைச் சர்க்கார் வாங்கிக்கொள்வதாக இருக்கவேண்டுமென்று மகாத்மா காந்தி தெளிவாகச் சொல்லி யிருக்கிறார்.

இதை நாங்கள் பூர்ணமாக ஆதரிக்கிறோம். "பள்ளிக்கூடத்தில் தயாரிக்கும் பொருள்களைச் சர்க்கார் விற்பனைக்கு எடுத்துக்கொள்ளுமாயின் ஒவ்வொரு பள்ளிக்கூடமும் தன் செலவைச் சமாளித்துக் கொள்ள முடியும்" என்று மகாத்மாஜி கூறுவதை நாங்கள் பூர்ணமாக ஏற்றுக்கொள்கிறோம்.

### ஒரு எச்சரிக்கை

பணம் சம்பந்தப்பட்ட பிரச்னை ஒரு பக்கமிருக்க, எப்படியும் போதனையும் பயிற்சியும் சரியாக நடைபெறுகிறதா என்பதை நன்கு தணிக்கை செய்யத் திறமையான ஏற்பாடுகள் செய்வது மிகவும் அவசியம். இவ்வாறு திறமையான தணிக்கை யில்லையாயின் பல சீர்கேடுகள் ஏற்படுமென்பது ஏற்கனவே மற்ற பாடங்களுடன் "தொழில் படிப்பு"ப் பாடங்களும் ஏற்படுத்தின

பள்ளிக்கூடங்களின் அநுபவமாகக் காணப்பட்டிருக்கிறது.

லாபம் பெரிதன்று—கல்வியே பெரிது

ஆனால் ஒரு முக்கியமான எச்சரிக்கை: கண்காணிப்பை அமுல் நடத்துவதில் பொருளாதார நோக்கமே பெரிதாகி, கல்வி நோக்கம் குறைந்துவிட லாகாது. இவ் வாபத்துத் தடுக்கப்பட வேண்டும். மாணவர்களின் பயிற்சி மூலம் பள்ளிக்கூடத்துக்கு லாபம் வருவதைவிட, மாணவர்களுக்குப் பயிற்சியும் அறிவும் ஏற்படுவதுதான் மிக மிக முக்கியம். மாணவர்களிடம் அதிகமாக வேலை வாங்குவதிலேயே உபாத்தியாயர்கள் தமது கவனத்தைச் செலுத்தி, மாணவரின் மூளை வளர்ச்சி, ஒழுக்க உணர்ச்சி முதலியவற்றில் கவனத்தைக் குறைத்துவிட லாகாது.

இத் திட்டத்துக்கு உபாத்தியாயர்களைத் தயாரிப்பதில் இவை யெல்லாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயங்கள்.

வார்தா கல்வித் திட்டப்படி, ஒவ்வொரு இந்தியச் சிறுவனுக்கும் 7 வருஷம் கல்வி போதிக்கப்பட வேண்டும். இந்த 7 வருஷத்துக்கும் வருஷவாரியாக விரிவாகத் திட்டம் போடுவதற்கு வேண்டிய அவகாசம் எங்களுக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும் ஒவ்வொரு தலைப்பின் கீழும், புதிய பள்ளிக்கூடங்களில் என்ன லட்சியம் கைக்கொள்ளப்பட வேண்டுமென்பதை மட்டும் இங்கு குறிப்பிடுகிறோம்.

இனிமேல் ஒவ்வொரு "மாகாணக் கல்வி போர்"டிலும், பாடத் திட்டம் தயாரிப்பதற்கென்று ஒரு நிபுணர் இருக்க வேண்டும். 7 வருஷத்துக்குப் பொருத்தமாக, பாடமுறைத் திட்டம் வகுக்க வேண்டியது அவரது பொறுப்பாக இருக்கவேண்டும். புதிய பள்ளிக்கூடங்களை மேற்பார்வையிட்ட அநுபவத்தின் மீதும் அவ்வப்போது உபாத்தியாயர்கள் தரும் யோசனைகள் மீதும் அத்தகைய நிபுணர்கள் விரிவான திட்டம் போட முடியும்.

இங்கு நாங்கள் பொதுப்படையாக ஒரு 7 வருஷத் திட்டத்தின் அம்சங்களை மட்டும் குறிப்பிடுகிறோம்:—

## அடிப்படைத் தொழில்

பள்ளிக்கூடப் படிப்பு முடிந்த பிறகு மாணவன் அந்தத் தொழிலை ஒரு ஜீவனோபாயமாகக் கைக்கொண்டு வாழ்வதற்குத் தேவையான அளவு பள்ளிக்கூடத்தில் தொழிற் பயிற்சி பெற்றுவிட வேண்டும்.

பின்வரும் தொழில்களை அடிப்படைத் தொழில்களாகக் கொள்ளலாம்:

(1) நூற்பதும், நெய்வதும்.

(2) தச்சு வேலை.

(3) விவசாயம்.

(4) பழத் தோட்டங்கள்; காய்கறித் தோட்டங்கள்.

(5) தோல் செப்பனிடுதல் முதலியன.

(6) ஸ்தல வசதிகளும் இயற்கை வசதிகளும் இருக்கக்கூடிய வேறு தொழில்கள்.

நூற்பதும், நெய்வதும் அடிப்படைத் தொழிலாக வைக்கப்படாத பள்ளிக்கூடங்களிலும், ஒவ்வொரு மாணவனும், பஞ்சு வெட்டுதல், தக்ளி மூலம் நூல் நூற்றல், சில விவசாய வேலைகள், ஆகியவற்றில் சிறிதாவது பயிற்சி பெறுவது கட்டாயமாக இருக்க வேண்டும்.

## II. தாய்ப் பாஷை

எல்லா எழுத்தறிவுக்கும் அடிப்படை தாய்ப் பாஷையைச் சரியாகப் போதிப்பதுதான். திறமையுடன் பேசவும், தவறின்றிப் படிக்கவும், எழுதவும் தெரியாவிட்டால், தெளிவான அபிப்பிராயங்கள் கொள்வதோ, சரியான முறையில் சிந்தனை செய்வதோ முடியாத காரியம். தவிரவும், தம் மூதாதையரின் பரம்பரைச் செல்வமாகிய அபிப்பிராயங்களும், உணர்ச்சிகளும், மாணவர்கள் மனத்தில் பதிவதற்கும் தாய்ப்பாஷைப் பயிற்சி மிகமிக முக்கியம். ஆகவே சமுதாயக் கல்விப் பயிற்சியுடன், சரியான ஒழுக்கமும் நீதி தர்ம லட்சியங்களும் இளைஞர்கள் மனத்தில் குடிபுகுவதற்குத் தாய்ப்பாஷையில் சரியான பயிற்சி அவசியம். தவிரவும், சிறுவர்களின் இயற்கையான அழகுணர்ச்சி வெளிப்படுவதற்குத் தாய்ப்பாஷையே சரியான கருவி. சரியான முறை

யில் போதிக்கப்படுமாயின், இலக்கியம் படிப்பது ஆனந்தத்தின் ஊற்ருக அமையும்.

7 - வருஷத்துப் படிப்புக்குள்ளாக (தாய்ப் பாஷை விஷயத்தில்) பின்வரும் லட்சியங்கள் கைகூடவேண்டும் :

(1) சிறுவர்கள், தம்மைச் சுற்றிலும் காண்கின்ற சம்பவங்களைப் பற்றி இயற்கைத் தொனியில், நம்பிக்கையுடன், தங்கு தடையின்றி, தட்டித் தடுமாருமல், சம்பாஷணை நடத்தும் திறமை பெற வேண்டும்.

இதன் பயனுக :—

(2) அன்ருட வாழ்க்கைக்குச் சம்பந்தமுள்ள எந்த விஷயத்தைக் குறித்தும், தெளிவாக, விஷய சம்பந்தம் அருமல், கோர்வையாகப் பேசும் வாக்கு வன்மை ஏற்பட வேண்டும்.

(3) சப்த மில்லாமல், அர்த்தக் கோர்வையுடன் கையெழுத்து அச்சுப் பிரதிகளை வேகமாகப் படிக்கும் திறமை வேண்டும். (சாதாரணமான எந்தப் பத்திரிகையையும் படிக்கத் திறமை பெறவேண்டும்.)

(4) சப்தத்துடன், தெளிவாக, அநுபவித்து, அர்த்தத் தொனியுடன் பாட்டுக்களையும் உரைநடை எழுத்துக்களையும் கேட்போருக்கு ருசியாகப் படிக்கும் திறமை பெறவேண்டும். (உயிரற்றுக் கேட்பவர்களுக்குப் புளித்துப் போகும்படி படிக்கும் மோசமான நடை தவிர்க்கப்பட வேண்டும்.)

(5) புஸ்தகத்தின் அட்டவணை, சூசிகை, பொருளடக்கம் முதலிய பகுதிகளை உபயோகிக்கவும் அகராதியையும், விஷய ஆராய்ச்சிக்கு உதவியான புத்தகங்களையும், புத்தகாலய (லைப்ரரி) வசதிகளையும் பயன்படுத்தவும் தெரியவேண்டும்.

(6) தெளிவாக, தவறின்றி, வேகமாக எழுதத் தெரிய வேண்டும்.

(7) அன்றாட சம்பவங்களையும், காட்சிகளையும் எழுத்தில் விவரித்து வர்ணிக்கும் திறமை வேண்டும். உதாரணமாக, கிராமத்தில் ஏதேனுமொரு கூட்டுறவு முயற்சி சம்பந்தமான பொதுக் கூட்டத்தைப் பற்றி ஒரு விவரம் எழுதத் தெரியவேண்டும்.

(8) சொந்தக் கடிதாசிகளும், சாதாரணமான காரிய வர்த்தகக் கடிதாசிகளும் எழுதத் தெரிய வேண்டும்.

(9) பிரசித்தி பெற்ற இலக்கிய ஆசிரியர்களின் கிரந்தங்களில் பரிச்சயமும், ருசியும் ஏற்பட வேண்டும். பல ஆசிரியர்களின் கிரந்தங்களிலும் சில பகுதிகளைப் போதிப்பதன் மூலம் இது ஏற்படும்.

## III. கணக்கு, கணிதம்

இந்தப் பாடத்தில் முக்கியமாக உத்தேசிக்கும் லட்சியம், ஒரு தொழில் விஷயமாகவும், வீட்டுக் காரியங்கள் விஷயமாகவும், பொது வாழ்வு சம்பந்தமாகவும் ஏற்படக் கூடிய சிறிய கணக்குப் பிரச்னைகளுக்கும், க்ஷேத்திர கணிதப் பிரச்னைகளுக்கும்

பதில்சொல்லத் தெரியவேண்டும். வர்த்தகக் கணக்கு வழக்கப் பரிச்சயமும், வரவு செலவு கணக்கு எழுதும் திறமையும் வேண்டும். இந்த நோக்கங்கள் நிறைவேறுவதற்குப் பின்வரும் பாடங்களில் பயிற்சியும், அறிவும் ஏற்படவேண்டும் :

கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், பின்னங்கள்; தசாம்ச பின்னம்; விகிதாசாரக் கணக்கு; பங்குப் பெருக்கம்; வட்டிக் கணக்கு; வயல் அளவு கணக்கு; க்ஷேத்திர கணிதம் (ஜாமட்ரி); வரவு செலவு கணக்கு.

குருட்டுப் பாடமாகச் சொல்லிக் கொடுத்தால் போதாது. வாழ்க்கைக்குச் சம்பந்தமுள்ள புள்ளி விவரங்களை உபயோகிக்க வேண்டும். கணக்குப் பாடத்துக்கும் வாழ்க்கை விவகாரங்களுக்கும் சம்பந்தமில்லாதது போல் கற்பிக்கக்கூடாது. கைத்தொழில், உற்பத்தியை மதிப்பிடுவது, அளப்பது முதலியவற்றி லெல்லாம் கணக்குப் போதிக்கப் பல இயற்கையான சந்தர்ப்பங்கள் கிடைக்கும்.

## IV. சமூக விஷய அறிவு

இத் தலைப்பின்கீழ், 7வருஷப் படிப்பில் பின்வரும் லட்சியங்கள் கைகூடவேண்டு மென்று உத்தேசிக்கப்படுகிறது :—

(1) பொதுவாக மனித சமூகத்தின் வளர்ச்சியிலும், விசேஷமாக இந்தியாவின் வளர்ச்சியிலும் மாணவர்களுக்குச் சிரத்தை யேற்பட வேண்டும்.

(2) தம்மைச் சுற்றிலுமுள்ள சமூக அமைப்பைப் பற்றியும் இயற்கை யமைப்பைப் பற்றியும் மாணவர்களுக்குச் சரியான பரிச்சயம் ஏற்படுவதோடு தம் சுற்றுப்புற நிலைமையைச் சீர்திருத்துவதிலும் சிரத்தை ஏற்படவேண்டும்.

(3) தாய் நாட்டினிடம் அன்பு, அதன் பழமையினிடம் மரியாதை யுணர்ச்சி, இந் நாடு பிற்கால வாழ்வில் ஒரு ஆர்வம், சத்தியம், நீதி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு கூட்டுறவுச் சமுதாயமாக நல்வாழ்வு எய்து மென்பதில் நம்பிக்கை— இவை மாணவர்களின் உள்ளத்தில் புகும்படி செய்ய வேண்டும்.

(4) அரசியல் பிரஜா வாழ்க்கையிலுள்ள உரிமைகள் பொறுப்புக்கள் இவற்றைப் பற்றிய சரியான விவேகம் ஏற்படுத்துவது.

(5) ஒவ்வொரு மனிதனும் நம்பத்தக்க கூட்டாளியாகவும், விரும்பத்தக்க அண்டை வீட்டுக்காரனாகவும் மதிக்கப்படுவதற்கு வேண்டிய தனி மனித ஒழுக்கத்தையும் சமூக ஒழுக்கத்தையும் வளர்ப்பது.

(6) உலகத்திலுள்ள பல மதங்களிடத்திலும் மரியாதை காட்டும் மனப்பான்மை ஏற்படுத்துவது.

சரித்திரம், பூகோள சாஸ்திரம், ஸிவிக்ஸ் (பிரஜா தந்திர சாஸ்திரம்) வர்த்தமான நிகழ்ச்சிகள், இவற்றோடு பல மதங்களைப் பற்றிய ஆராய்ச்சி ஆகிய பாடங்கள் மூலம் மேலே சொல்லப்பட்ட

குணங்கள் பெருக வழி செய்யலாம். இந்தப் பாடங்கள் முதன்முதலில், சிறுவர்களின் சுற்றுப்புற விஷயங்களையும் பிரச்னைகளையும் பற்றியதாக இருக்க வேண்டும். மனிதர்கள் தமது தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதற்கு அனுசரிக்கும் பல வேறு வழிகளைப் பற்றியும் மாணவர்களின் சிரத்தை தூண்டப்பட வேண்டும். மனிதனின் வாழ்க்கையையும் வேலையையும் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டுமென்ற ஆவல் ஏற்படுவதற்கு இது ஆரம்ப முயற்சியாக அமையும்.

கைக்கொள்ள வேண்டிய போதனு முறை

(1) இந்திய தேச சரித்திரத்தில் முக்கியமான சம்பவங்கள் சொல்லித் தரப்படவேண்டும். மக்களின் சமூக நாகரிக வளர்ச்சியில் முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டசந்தர்ப்பங்கள் முக்கியமாகப் போதிக்கப்பட வேண்டும். படிப்படியாக நாகரிகத்திலும் அரசியலிலும் இந்நாடு முழுவதும் ஒரே தேசம் என்ற உணர்ச்சி ஏற்பட்ட வரலாறும், தேசீய ஐக்கியத்தின் அடையாளங்களும் மாணவர்களுக்குத் தெரியவேண்டும். கூட்டுறவு முயற்சியின் அடிப்படையான அன்பு, சத்தியம், நீதி ஆகிய தர்மங்களும், தேசீய ஐக்கிய உணர்ச்சியும், மனித சகோதரத்வமும் முக்கியமாக மனத்தில் பதிய வேண்டும். சிறு வகுப்புக்களில், பெரும்பாலும் முக்கியஸ்தர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தின் மூலமே இவை போதிக்கப்படும். மேல் வகுப்புக்களில், சமூக

நாகரிகக் கொள்கைகளைப் பற்றிய முறையில் பொதுப்படையான விஷயங்கள் போதிக்கப்படலாம். தேசத்தின் பழைய மகிமைகளில் ஏற்படும் பெருமை யுணர்ச்சியானது, வீண் இறுமாப்பாகவும் பிற தேசத்தினிடம் துவேஷமாகவும் ஆகிவிடக் கூடாது. மனித வர்க்கத்துக்கு விடுதலை தேடிய உலகப் பெரியார்களின் சரித்திரமும் சமாதானத்துக்காகச் செய்யப்பட்ட பெரு முயற்சிகளின் வெற்றியும் பாடத் திட்டத்தில இடம் பெற வேண்டும். அஹிம்சையும் அதனுடன் துணையாகப் பிறக்கும் பல நற்குணங்களும் பலாத்காரம், சூது, வாது இவற்றைவிட நாளடைவில் அதிக வலிமையுள்ளவை என்பதைப் பல வாழ்க்கைச் சரித்திரங்களின் மூலம் மாணவர்கள் உணரும்படி செய்ய வேண்டும். இந்தியாவின் தேசீய எழுச்சியின் சரித்திரமும், அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் இந்தியா நடத்தும் போராட்டமும் இளைஞர்கள் மனத்தில் படியுமானால், அவர்கள் இடைக்காலத்தில் ஏற்படக்கூடிய சிரமங்களைத் தாங்கிச் சமாளிப்பதில் தம்முடைய பங்குகளை ஏற்றுக் கொள்ளத் தயாராவார்கள். தேசீய விழாக்களும், தேசீய வாரமும் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் கொண்டாடப்பட வேண்டும்.

(2) பொது ஜன உபயோகத்துக்கான வர்த்தக ஸ்தாபனங்கள் (மின்சாரக் கம்பெனிகள், தந்தி, தபால், முதலியவை) பற்றியும், பஞ்சாயத்து, கூட்

கூட்டுறவு சங்கங்கள் முதலிய ஸ்தாபனங்கள் பற்றி யும், சர்க்கார் உத்தியோகஸ்தரின் கடமைகள் பற்றியும் ஜில்லா போர்ட், முனிசிபாலிட்டி முத லியவற்றின் அமைப்பைப் பற்றியும், வோட்டுரிமை, பிரதிநிதித்வ ஸ்தாபனங்களின் செல்வாக்கு முதலி யவற்றைப் பற்றியும் மாணவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். இவ் விஷயங்களைப் போதிக்கும்போது, வாழ்க்கைக்குச் சம்பந்தமுள்ள முறையில் போதிக்க வேண்டும். பாடசாலையிலேயே மாணவர்கள் தம் மைத் தாமே ஒழுங்குபடுத்திக் கொள்ளும் முறை யில் "சுய - ஆட்சி" அமைப்பில் சில காரியங்கள் நிர்வகிக்கப்படலாம். பல மாணவர்கள் ஒன்று சேர்ந்து பத்திரிகை படிப்பதன் மூலம் அவ்வப் போது நடக்கும் முக்கியமான சம்பவங்களில் மாண வர்கள் பரிச்சயம் பெறுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

(3) "சமூகப் படிப்பு" என்ற இனத்தில் உல கத்துப் பூமி யமைப்பு, ஜனங்களின் நடையுடை பாவனை முதலியவற்றைப் பற்றி முக்கிய விஷயங் கள் சம்பந்தமான பொது அறிவும், இந்தியாவை யும் பிற நாடுகளுடன் அதற்குள்ள சம்பந்தத்தை யும் பற்றிய விரிவான விஷய அறிவும் மாணவர் களுக்கு இருக்க வேண்டும்.

அதில் பின்வரும் விஷயங்கள் போதிக்கப்பட வேண்டும்:—

(ஏ) இந் நாட்டிலுள்ள மனித வாழ்க்கை, மிரு கங்களைப் பற்றிய விவரங்கள், தாவர வர்க்கங்களைப்

பற்றிய விவரங்கள், இவை பூமி யமைப்பு சீதோஷ்ணம் முதலியவற்றால் எவ்வாறு அமைகின்றன வென்பதும், பிற நாடுகளைப் பற்றிய இவ் விஷயங்களும் போதிக்கப்பட வேண்டும். (கதைகள், வர்ணனைகள், படங்கள், முதலியவற்றுடன், ஆங்காங்குள்ள சுற்றுப்புற விஷயங்களுடன் சம்பந்தப்படுத்தி இவ் விஷயங்கள் போதிக்கப்பட வேண்டும்.)

(பி) இயற்கைப் பருவக் காலத்தைப் பற்றிய அறிவு. (இவ் விஷயம் பெரும்பாலும் பள்ளிக்கூட அறைக்கு வெளியே மாணவர்கள் நேரில் கண்டறியக்கூடிய முறையில் போதிக்கப்படலாம்.) உதாரணமாக, வருஷத்தின் ஒவ்வொரு மாதத்திலும் நடு மத்தியானத்தில் சூரியன் இருக்குமிடம், உஷ்ணமானி (தெர்மாமீட்டர்) உபயோகித்தல்; பாராமீட்டர் உபயோகித்தல்; மழை பெய்வது சம்பந்தமாக வருஷ முழுவதிலும் புள்ளி விவரங்கள் திரட்டுதல்; காற்றின் திசை; பகல் இரவு நேரங்கள் கூடுவதும் குறைவதும்; இன்னம் இவற்றைப் போல மாணவர்கள் அன்றாடம் கவனிக்கக்கூடிய பல விஷயங்கள்.

(ஸி) தேசப் படம் பார்த்தல்; தேசப் படம் எழுதும் வகை; பூமி ஒரு உருண்டை யென்ற கருத்து; வசிக்கும் ஊரின் நில அமைப்பு; ரோடு அடையாளங்கள்; தேசப் படத்திலுள்ள அட்டவணையை உபயோகித்தல் முதலியன.

(டி) அந்த ஊர் கைத்தொழிலுக்கும், வர்த்தகத்துக்கும் தொடர்புள்ள போக்கு வரவுப் பாதைகள்; போக்கு வரவுச் சாதனங்கள்.

(இ) ஜீவனோபாய முறைகளைப் பற்றிய விவரங்கள்; அந்தந்த ஊரிலுள்ள விவசாயம், கைத்தொழில்; (வயல்களையும், தொழிற்சாலைகளையும் பார்வையிடுதல்); ஒவ்வொரு பிரதேசமும், மற்றொரு பிரதேசத்தின் ஒத்துழைப்பை நாடி நிற்கும் தன்மை; நில அமைப்பு, சீதோஷ்ணம் முதலிய இயற்கை வசதிகளுக்கும், ஆங்காங்குள்ள விவசாயக் கைத்தொழில் முறைகளுக்கு முள்ள சம்பந்தம்; இந்தியாவின் முக்கியத் தொழில்கள் முதலிய விஷயங்கள்.

## V. விஞ்ஞான அறிவு

இந்தப் பாடத்தில் முக்கியமான லக்ஷியங்கள்:

(1) இயற்கையைப் பற்றி ஸ்வானுபூதியுடன் ரஸித்து, இயற்கையின் விசேஷங்களை அறிந்து கொள்ளும் மனப்பான்மை.

(2) ஒரு விஷயத்தை நுட்பமாகக் கவனிக்கவும், சோதனை மூலம் அநுபவத்தின் உண்மையைத் தெரிந்துகொள்ளும் மனப்பான்மையும்.

(3) இயற்கையின் லீலைகளிலும் விஞ்ஞான அறிவை மனிதன் பயன்படுத்திக்கொள்ளும் முறைகளிலும் உள்ள முக்கியமான பௌதிக குண விசேஷங்களைத் தெரிந்துகொள்ளுதல்.

(4) பெரிய விஞ்ஞான சாஸ்திரிகள் ஒரு உண்மையைத் தெரிந்துகொள்வதற்காக எவ்வளவுகஷ்ட நஷ்டங்களுக்குத் தம்மை இலக்காக்கிக் கொண்டனர் என்பதைப் பற்றிய முக்கிய சம்பவங்களைப் போதிப்பதன் மூலம் மாணவர்களுக்கு அறிவில் அபிலாஷை ஏற்படும்படி தூண்டுவது.

இதன் லக்ஷியங்கள் கைகூடுவதற்குப் பின் வரும் பாடங்கள் போதிக்கப்பட வேண்டும்:

(எ) இயற்கைப் பொருள் ஆராய்ச்சி

(1) சுற்றுப்புறங்களி லுள்ள செடிகள், விளை பொருள்கள், மிருகங்கள், பக்ஷிகள் முதலியவற்றைப் பற்றிய விஷயங்கள்.

(2) பருவ கால மாறுதல்களும் அம் மாறுதல்களின் பயனாக, மனிதர், மிருக வர்க்கம், தாவரம் முதலியவற்றின் வாழ்வில் ஏற்படும் மாறுதலும்.

(3) வெவ்வேறு பருவக் காலங்களில் கிடைக்கக் கூடிய விளைபொருள்கள்.

(பி) தாவர சாஸ்திரம்

(1) செடி கொடிகளின் வெவ்வேறு உறுப்புக்களும் அவற்றின் வேலையும்.

(2) வித்து முளைக்கும் வகை, வளருதல், மீண்டும் வர்க்கம் விருத்தியாதல்.

(3) பள்ளிக்கூடத் தோட்டத்தில் வேலை செய்வதன் மூலமும், ஊரிலுள்ள வயல் காடுகளைச் சுற்றிப் பார்ப்பதன் மூலமும் உஷ்ணம், ஈரம், வெளிச்சம்,

காற்று முதலியவற்றிற்கும் தாவர வர்க்கத்துக்கு முள்ள தொடர்பும் விதை உரம் முதலியன பற்றிய அறிவும் மாணவர்களுக்கு ஏற்படும்.

(ஸி) மிருக உயிர் சாஸ்திரம்

மனிதரின் நண்பராகவும் பகையாகவும் இருக்கும் கிருமிகள், பூச்சிகள், ஊர்வன, பறப்பன முதலியவற்றைப் பற்றிய அறிவு.

(டி) உடலமைப்பு சாஸ்திரம்

மனித சரீர அமைப்பு, கருவிகள், அவற்றின் வேலைகள்.

(இ) சுகாதார சாஸ்திரம்

(1) சரீர சுத்தி: பற்கள், நாக்கு, நகம், கண், தலைமுடி, மூக்கு, சருமம், துணி இவற்றில் சுத்தம்.

(2) வீட்டிலும் கிராமத்திலும் சுத்தம்; சுகாதார முறைகள்; மல ஜலங்களால் ஏற்படும் அசுத்தத்தை நிவர்த்திக்கும் முறைகள்; குடி தண்ணீர்; கிராமக் கிணறு; சுத்தமான வாயு; மரங்கள் நமக்குச் செய்யும் தொண்டு; சுவாசம் உட்கொள்ளும் முறை.

(5) உணவு: ஆரோக்கிய மளிப்பதும் பாதகமானதும் பற்றிய அறிவு, புஷ்டி தரும் அம்சங்களைப் பற்றிய அறிவு.

(6) சில சிறு சிகிச்சை முறைகள்.

(7) தொத்து நோய்கள்; பாதுகாப்பு முறைகள்.

(8) ஆரோக்கியத்தைக் காத்துக்கொள்வதில் வாழ்க்கை ஒழுக்கத்தின் அவசியம்.

(எப்) உடல் வலிமை

விளையாட்டுக்கள்; சரீர அப்பியாசம் முதலியன.

(ஜி) ரஸாயனம்

வாயு, ஜலம், புளிப்புத் திராவகங்கள், உப்புத் திராவகங்கள்; உப்புக்கள்.

(எச்) நக்ஷத்திரங்கள்

இரவில் திசை, நேரம் கண்டுபிடிக்கும் வகை.

(ஐ) கதைகள்

பெரிய விஞ்ஞானிகள், உலகத்தின் பல பகுதிகளில் சுற்றிப் புதுப் புது இடங்களைக் கண்டுபிடிப்போர் இவர்களது சரித்திர வரலாறுகளும், இவர்களால் மனித வர்க்கத்துக்கு ஏற்பட்ட நன்மையும்.

## VI. படமெழுதுதல்

இப் பாடத்தின் லக்ஷியங்கள்:

(1) ஒரு பொருளைக் கூர்ந்து கவனித்து அவற்றின் உருவம் நிறம் முதலிய வேறுபாடுகளை நன்கு கவனிக்கும்படி கண்ணுக்குப் பயிற்சி யளிப்பது.

(2) உருவத்தைப் பற்றிய ஞாபகம் மனத்தில் இருக்கும்படி பழக்குவது.

(3) இயற்கையிலும் கலையிலும் உள்ள அழகுச் சிறப்பை அறிவுடன் அநுபவிக்கும் திறமையை வளர்ப்பது.

(4) அலங்காரம், அழகான ஜோடிப்பு இவற்றில் மாணவர்களின் திறமை தாண்டப்பட வேண்டும்.

(5) செய்யப்பட வேண்டிய பொருள்களைப் பற்றிச் சுமாராகப் படம் போட்டுக் காட்டும் திறமை.

இந்த லக்ஷியங்கள் கைகூடுவதற்கு :—

(ஏ) படித்த அல்லது பார்த்த ஒரு சாமானைக் குழந்தைகள் படம் போட்டுக் காட்டவேண்டும்.

(பி) நேரில் சாமானைப் பார்த்துப் படம் எழுதுவது; ஞாபகத்திலிருந்து எழுதுவது—(மிருகங்கள் மனிதர் முதலியவற்றை)—எல்லாம் அன்றாடம் படிக்கும் தொழில் முதலியவற்றுடன் சம்பந்தப்பட்ட முறையில்.

(ஸி) 'டிஸைன்' வரைவது.

(டி) அளவு காட்டும் படங்கள் (ஸ்கேல் டிராயிங்; கிராப் டிராயிங்ஸ்) முதல் நான்கு வருஷங்களில் மாணவர்கள் தமது இயற்கைப் பொருட் பாடங்களையும் கைத்தொழில் பாடங்களையும் பற்றின படங்கள் மட்டும் போடக் கற்றுக் கொள்ளலாம். பிறகு அடுத்த 3 வருஷத்தில் டிஸைன், ஜோடிப்பு முதலியன கற்றுக் கொள்ளலாம்.

## VII. ஸங்கீதம்

சில இனிமையான பாட்டுக்களை மாணவர்களுக்குக் கற்பித்து நல்ல சங்கீதத்தில் அவர்களுக்கு ருசி ஏற்படும்படி செய்யவேண்டும்.

மாணவர்களுக்கு இயற்கையிலேயே "லய"த்தில் உள்ள பிரியத்தை வளர்ப்பதற்காக அவர்களுக்குக் "கைத் தாளம்" போடுவதில் பயிற்சி யளிக்கலாம். தாளத்துக்குச் சரியாக "நடை" பழகுவதும் மிகவும் பயன் தரத்தக்க முறையாகும்.

பாட்டுக்களைப் பொறுக்குவதில் மிகுந்த கவனம் செலுத்தி உயர்ந்த உணர்ச்சிகளைத் தூண்டும் இனிய பாடல்களையே சொல்லித்தர வேண்டும்.

கோஷ்டியாகப் பாடுவதில் விசேஷச் சிரத்தை செலுத்த வேண்டும்.

## VIII. ஹிந்துஸ்தானி

பாடத் திட்டத்தில் ஹிந்துஸ்தானியைக் கட்டாயப் பாடமாக வைப்பதன் நோக்கம் இந்தியாவின் பொதுப் பாஷையில் மாணவர்களுக்கு ஓரளவு பரிச்சயம் இருக்கவேண்டு மென்பது. அவர்கள் வயது வந்த பிரஜைகளாகும் போது இந் நாட்டின் பல வேறு பிரதேசங்களில் வசிப்போராகிய தேச சகோதரருடன் ஒத்துழைக்க இக் கருவி அவர்களுக்கு அவசியமாகும்.

இந்தப் பாஷை ஹிந்துக்கள் முஸ்லிம்கள் ஆகிய இரண்டு பெரிய சமூகங்களின் சேர்க்கையால் ஏற்பட்ட ஒரு முக்கியமான பயன் என்பதை உபாத்தியாயர் மாணவர்களுக்கு நன்கு உணர்த்த வேண்டும். இரண்டு சமூகங்களின் சிந்தனைக் களஞ்சியமும் அறிவுச் செல்வமும், அபிலாஷைகளும் இந்தப்

பாஷையில் நிறைந்திருக்கிறது. இந்தப் பாஷையி னிடம் மாணவர்கள் பெருமை யுணர்ச்சி கொண்டு சேவை செய்யப் பிரியம் கொள்ளவேண்டும்.

ஹிந்துஸ்தானி பேசப்படும் பிரதேசங்களில் அதுவே தாய்ப் பாஷையாக இருக்குமாயினும், மாணவர்கள் ஹிந்தி, உர்து ஆகிய இரண்டு (லிபி) எழுத்திலும் புத்தகங்கள் படிக்கும் ஆற்றல் பெற வேண்டும்.

ஹிந்துஸ்தானி தாய்ப் பாஷையாக இல்லாத மாகாணங்களில் 5-வது 6-வது வருஷப் படிப்பில் ஹிந்தி கட்டாயப் பாடமாகும். ஆனல், லிபிக்கு ஹிந்தியையோ, உர்துவையோ எதை வேண்டுமாலு லும் எடுத்துக் கொள்ளலாம். இரண்டு லிபிக்கும் மாணவர்கள் இருந்தால், எல்லா மாணவர்களுக்கு மே இரண்டையும் சொல்லித் தருவது நலம்.

சர்க்கார் அல்லது பொது ஸ்தாபனங்கள் நடத் தும் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இரண்டு லிபி யையும் சொல்லித் தர வசதி யிருக்கவேண்டும்.

5-வது வகுப்பு வரையில், பொதுவாகச் சிறுவர் களுக்கும் சிறுமிகளுக்கும் பாடத் திட்டம் ஒரே மாதிரித்தான் இருக்கும். 4,5-வது வகுப்பில், (ஜென ரல் ஸயன்ஸ்) "விஞ்ஞானம்" என்ற பாடத்தில் சிறு மாறுதல் செய்து பெண்களுக்குக் "குடித்தனப் பாங்கு" க்கான பயிற்சிக்கு இடம் தரலாம். 6,7-வது வகுப்பில் பெண்களுக்குக் "குடித்தனப்

பாக்கு" என்ற பாடத்தில் அதிகக் கவனம் செலுத்தி வேறு தொழிற் கல்விப் பாடங்களைக் குறைக்கலாம்.

உபாத்தியாயர்களைச் சரியானபடி பயிற்றுவிப்பதுதான் இந்தக் கல்வித் திட்டத்தின் வெற்றிக்கு மற்ற எல்லாவற்றையும்விட மிகவும் முக்கியமான விஷயம்.

சாதாரணக் கல்வி விஷயத்தில்கூட, உபாத்தியாயரின் தன்மையைப் பொறுத்தே இருக்கும் கல்வியின் தன்மை. ஆகவே ஒரு புதிய முறையில் பெரியதோர் மாறுதல் செய்யப்படும்போது, இந்த மாறுதல்களைக் காரியத்தில் நடத்தி வைப்பவர்களான உபாத்தியாயர்கள் பெறும் பயிற்சி மிகவும் முக்கியமாகிறது.

ஆகையால் புதிய திட்டத்தில் உபாத்தியாயர்களாக வருபவர்கள், புதிய கல்வி விஷயமான லக்ஷியங்களையும் அதில் உத்தேசிக்கப்படும் சமூக லக்ஷியங்களையும் தெரிந்துகொண்டவர்களாக இருப்பதோடு, திட்டத்தை நடத்தி வைப்பதில் ஊக்கமும் உற்சாகமு முள்ளவர்களாக இருப்பது மிக மிக அவசியம்.

அவர்கள் சாதாரணமாக மூளை யறிவு விஷயங்களையும் ஏட்டுச் சுரைக்காயாக அமையும் பாடங்களையும் மட்டு மல்லாது, சில தொழில்களையும் கற்பிக்க வேண்டியவர்களாக இருப்பதால், அவ் வுபாத்தியாயர்களின் பயிற்சியில் சில 'அடிப்படைக்' கைத் தொழில்களில் பல அம்சங்களைப் பற்றிய நுணுக்க அறிவும் சேர்க்கப்படுவது அவசியம்.

அவர்கள் போதிக்கும் முறையும் பாட விஷயத்தைக் கையாளும் முறையும் பழைய முறைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருக்கும். பாட விஷயங்களைத் தனி விஷயங்களாக வாழ்க்கைக்குச் சம்பந்தமில்லாத முறையில் ஒதுக்கிவிடாது, பள்ளிக்கூடத்தின் பல வேறு போதனை விஷயங்களின் உறுப்பாக ஒன்றுபடும் வகையிலேயே எல்லாப் பாடங்களும் போதிக்கப்பட வேண்டும். வாழ்க்கை, படிப்பு, உழைப்பு மூன்றும் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டிருக்கும்.

உபாத்தியாயர்கள் ஆங்காங்குள்ள சமூகத்தின் வாழ்க்கை சம்பந்தமான எல்லா முயற்சிகளிலும் சிரத்தையும் கவனமு முள்ளவர்களாக இருப்பதோடு, மாணவனுக்கும் சமூகத்துக்கு முள்ள தொடர்பையும் நன்கு தெரிந்துகொண்டவர்களாக இருத்தல் வேண்டும்.

புதிய கல்வித் திட்டம் அது உத்தேசிக்கப்பட்ட முறையில் நடத்தி வைக்கப்பட வேண்டுமாயின் மேலே சொன்ன விஷயங்கள் மிகவும் முக்கியமாக மதிக்கப்பட வேண்டும்; அதோடு உபாத்தியாயரின் சாமர்த்தியமும் சாதுரியமும் அறிவு விஷய ஜாமிதாவும் அதிகமாக இருக்கும்படி உபாத்தியாயருக்குப் பயிற்சி யளிக்கப்பட வேண்டும்.

இந்தத் திட்டத்தில் உபாத்தியாயராகப் பயிற்சி பெற விரும்புவோர் சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு பள்ளிக்கூடத்திலோ தேசியப் பள்ளிக்கூடத்

இலோ மெட்ரிகுலேஷன் படிப்பு வரையிலாவது படித்திருக்க வேண்டும். இல்லாவிடில் "வெர்னகுலர் பைனல்" என்ற படிப்பில் தேறிய பின் 2 வருஷம் உபாத்தியாயராக அநுபவம் பெற்றிருக்க வேண்டும்.

உபாத்தியாயர் பயிற்சிக்கான பாடத் திட்டம்

(3 வருஷத்தில் முடியவேண்டியது)

(1) (ஏ) பருத்தி விளைவித்தல், பொறுக்குதல், அரைத்துப் பஞ்சு வெட்டிப் பட்டை போடுதல், நூல் நூற்றல், பாவு ஓட்டுதல் (பருத்தி அல்லது கம்பிளி.)

(பி) கைராட்டினத்தின் 'யந்திர' அமைப்பு. (நூற்றலுக்குப் பதில் வேறு தொழில் பொறுக்கப் பட்டால், அதற்கான கருவிகள்.)

(ஸி) கிராமத் தொழில்களைப் பற்றிய பொருளாதார அறிவு. (குறிப்பாக, அந்தப் பிரதேசத்தி லுள்ள அடிப்படைத் தொழிலைப்பற்றி.)

(டி) சிறு தச்சு வேலைகள் (பொறுக்கப் பட்ட கைத்தொழில் சம்பந்தமாக.)

(2) பின்வரும் "அடிப்படைத் தொழில்க"ளில் ஏதாவதொன்றில் பயிற்சி:—

(ஏ) நூற்றல், நெசவு.

(பி) விவசாயம்.

(ஸி) காய் கறி, பழத் தோட்ட வேலைகள்.

(டி) தச்சு வேலை.

(இ) விளையாட்டுச சாமான்கள் செய்தல்.

(எப்) தோல் வேலைகள்.

(ஜி) காகிதம் செய்தல் - அல்லது - அந்தந்தப் பிரதேசத்துக் கேற்ற வேறு ஏதாயினும் ஒரு தொழில்.

(3) கல்விக் கொள்கைகள் என்ற தலைப்பில் பின்வரும் விஷயங்கள் சேர்க்கப்பட வேண்டும்:

(ஏ) உற்பத்திக்கான உழைப்பின் மூலம் கல்வி போதிப்பது என்ற அடிப்படைக் கொள்கை.

(பி) பள்ளிக்கூடத்துக்கும் சமூகத்துக்குமுள்ள தொடர்பு.

(ஸி) குழந்தைகளின் மன அமைப்பைப் பற்றிய அறிவு. ஒரு புதிய திறனைச் சம்பாதிப்பது பற்றிய மனோதத்துவம்.

(டி) திட்டம் வகுத்து, உருவகப்படுத்துவது பற்றிய போதனை முறைகள்.

(இ) தேசத்திலுள்ள வாழ்க்கை நிலையையும், வாழ்க்கை முறையையும் பொறுத்து இப் புதிய கல்வித் திட்டத்தின் லட்சியங்கள்.

(4) உடலமைப்பு சாஸ்திரம், சுகாதார சாஸ்திரம், நல்லுணவு பற்றிய விஷயங்கள் முதலியன. (காரியத்தில் பயன்படக்கூடிய விஷய அறிவு முக்கியம்.)

(5) சமூக விஷயங்கள் பற்றி ஏற்கனவே படித்துள்ளதை மறுபடியும் புதுப்பித்து, உபாத்தியாயரின் சமூக மனப்பான்மையானது புதிய சமூக வளர்ச்சி பற்றிய உணர்ச்சியைப் பெறும்படி, பல

பிரச்னைகள் கவனிக்கப்பட வேண்டும். சென்ற 50 வருஷங்களில் இந்திய சமூகத்தில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி, மாறுதல் முதலியவற்றை உபாத்தியாயர்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

(6) ஹிந்துஸ்தானி பாஷையை ஹிந்தி - உர்து ஆகிய இரண்டு எழுத்துக்களிலும் படிக்கவும் எழுதவும் தெரிய வேண்டும்.

(ஹிந்துஸ்தானி பேசப்படும் இடமாயினும், பேசப்படாத இடமாயினும் சரி, உபாத்தியாயர்களுக்கு இந்தப் பாடம் உண்டு.) எல்லா சர்க்கார் பள்ளிக்கூடங்களிலும் இக் கல்வியால் எதிர்பார்க்கப்படும் சமூக லக்ஷியங்கள் நிறைவேறுவதற்கு இது அவசியம்.

(8) பிளாக்போர்டில் எழுதவும் சித்திரம் போடவும் தெரியவேண்டும்.

(9) தேகாப்பியாசம், டிரில் விளையாட்டுக்கள்.

(10) பிரத்தியட்சப் பழக்க மூலமும் பயிற்சி மூலமும் மேற்பார்வை யநுபவம் ஏற்படுத்துதல். மேலே விவரிக்கப்பட்ட முறையில் உபாத்தியாயரைப் பயிற்றுவிக்கும் பள்ளிக்கூடங்கள், உபாத்தியாயரும் மாணவரும் சேர்ந்து பரஸ்பரம் நெருங்கி வாழும் 'ஹாஸ்டல்' பள்ளிக்கூடங்களாகவே இருக்குமென்று நாங்கள் எதிர்பார்க்கிறோம். மாணுக்கரும் ஆசிரியர்களும் கூட்டுறவாகப் பல துறைகளில் சமூக வாழ்க்கையில் ஒன்றுபட்டுப் பங்கெடுத்துக்கொள்வதன் மூலம் உபாத்தியாயராகப் பயிற்சி பெறும் ஒவ்

வொருவரின் தனித் திறனும் ருசியும் விகாஸமடைய வசதி யுண்டாகும். ஆகையால் பயிற்சிக் காலத்தி லேயே உபாத்தியாய மாணவர்களும் ஆசிரியர்களும் அவரவர்களது ருசிக் கேற்ற பல முயற்சிகளில் பள் ளிக்கூட வாழ்வின் போதே ஈடுபட ஊக்க மளிக்க வேண்டும்.

"உபாத்தியாயர் பயிற்சி"ப் பள்ளிக்கூடங் களில் இம்மாதிரிச் சமூக முயற்சிகளும், அவரவர் ருசிக்கேற்ற சில தொழில்களும் (செடி வளர்த்தல், சித்திரம் எழுதுதல், தச்சு வேலை போன்றன)

இவை யெல்லாம் எவ்வளவு குதூகலத்துட னும் ஊக்க உற்சாகத்துடனும் நடக்கின்றனவோ அதைப் பொறுத்துத்தான் பயிற்சியின் உண்மை யான வெற்றியும் பயனும்.

மேலே சொல்லப்பட்ட பாடத் திட்டம் மிகவும் பளுவானது என்றும் ஆகையால் காரிய சாத்திய மன்று என்றும் சிலர் நினைக்கக்கூடும். அந்த அபிப்பிராயத்தை நீக்குவது மிகவும் அவசியம். சரி யான மனப்பான்மையுடன் அம் முயற்சியைக் கவ னித்தால் அந்தப் பாடத் திட்டத்தைப் பூர்த்தி செய் வதில் அசாத்திய மெதுவு மிருக்காது.

இது சேர்ந்தாற்போல 3 வருஷத்தில் அமு லுக்கு வரவேண்டிய விஷயம். அநுபவத்தின் மீது இந்த 3 வருஷத்துக்குள்ளாகவே ஒரு தெளி வான திட்டம் போட்டு அதை நடத்தலாம். அநு பவத்தின்மீது போடவேண்டிய அத் திட்டத்தின்

நுணுக்கம் இப்போது வெறும் காகிதத் திட்டமாகத் தயாரிக்கப்படுவது எளிதன்று.

தவிரவும், கல்வித் திட்டம் முழுதும் அமுலுக்கு வந்த பிறகு சில வருஷத்துக் கப்பால், உபாத்தியாயர் பயிற்சிக்கு வருபவர்கள், தமது சாதாரணப் படிப்பிலேயே, இப் பாடத் திட்டத்திலுள்ள பல விஷயங்களை ஏற்கனவே கற்றவர்களாக இருப்பார்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. (அதாவது வார்தா திட்டப்படி சிறு வயதில் 7 வருஷக் காலம் கல்வி கற்றவர்கள் வாத்தியார் வேலைக்கான பயிற்சியின் போது புதிதாகக் கற்றுக்கொள்ள வேண்டியதாக மீத மிருக்கும் விஷயங்கள் மிகவும் குறைவாகவே இருக்கும். உதாரணமாக, கைத்தொழில் அதன் நுணுக்க அறிவு இதெல்லாம் அவர்களுக்கு ஏற்கனவே ஏற்பட்டிருக்கும்.) உபாத்தியாயர் பயிற்சிக்கூடங்களில் புதிதாகப் படிக்கவேண்டிய "பாட விஷயங்கள்" அதிக மிருக்கமாட்டா. ஏற்கனவே படித்ததை "உபாத்தியாயர்" ஹோதாவில் எவ்வாறு பயன்படுத்துவது என்பதற்கான பயிற்சி தான் "டிரெய்னிங் ஸ்கூல் படிப்பு".

மூன்றாவதாக, இந்தப் பாடத் திட்டத்திலுள்ள ஒவ்வொரு விஷயத்திலும் உபாத்தியாயருக்குப் பூர்ணமான பாண்டித்தியம் ஏற்படுத்துவதன்று இதன் நோக்கம். இவ் விஷயங்களைப் போதிக்கும் சிறுவர்களுக்கும், சிறுவர்கள் தம்மைச் சுற்றிலும் காண்கின்ற பொருள்களுக்கும் வாழ்க்கைக்கும்,

சம்பந்த மிருப்பதாக உணரும்படி செய்வதற்கான பயிற்சியை உபாத்தியாயருக்கு ஏற்படுத்துவதே பயிற்சியின் முக்கிய நோக்கம். பயிற்சி பெறும் மாணவ உபாத்தியாயர் உண்மையிலேயே தம் உத்தியோகத்தைப் பற்றிப் பெருமை யுணர்ச்சி கொள்வாரானல், அறிவில் அபிலாஷை யிருக்குமானல், தம் முயற்சி மூலமே அவர் பல விஷயங்களைப் பற்றியும் நுட்பமான அறிவும் பாண்டித்தியமும் வளர்த்துக்கொள்வார். ஆனல் பயிற்சிப் பள்ளிக்கூடத்துப் பாடம் சம்பந்தப்பட்ட மட்டில், அவர்களைப் பெரிய பண்டிதர்களாக்குவ தன்று நமது உத்தேசம். திறமையும் அறிவுமுள்ள உழைப்பாளராகச் சரியான புதிய மனப்பான்மையுள்ள உபாத்தியாயர்களைத் தயாரிப்பதே முக்கிய நோக்கம். சமூகத்துக்குச் சேவை செய்து புதிய தலைமுறைகள் நல்ல நிலை எய்துவதற்கு உதவுவதே உபாத்தியாயரின் லட்சியமாக இருக்கவேண்டும். இக் கல்வித் திட்டத்தை அவர்கள் நன்கு உணரும்படி செய்ய வேண்டும்.

### தாமதத்தைத் தவிர்க்கக்
### குறைந்த காலத்துக்குள் பயிற்சி அளிப்பதற்கு
### ஒரு பாடத் திட்டம்

வார்தா கல்வித் திட்டம் தாமதமின்றிக் கூடிய சீக்கிரம் அமுலுக்கு வரவேண்டு மென்பதற்காக ஒரு வருஷத்துக் குள்ளேயே பயிற்சி முடிந்து போகும் முறையில் ஒரு பாடத் திட்டம் போடுகிறோம்.

இப்போதுள்ள சாதாரணப் பள்ளிக்கூடங்களி லிருந்தும், தேசீயப் பள்ளிக்கூடங்களிலிருந்தும், ஆசிரமங்களிலிருந்தும், சில உபாத்தியாயர்களைப் பொறுக்கி யெடுத்து அவர்களுக்குப் பயிற்சி யளிக்க லாம்.

அவ்வாறு பொறுக்கப்பட்ட உபாத்தியாயர் கள் ஏற்கனவே வாத்தியார் வேலையில் அநுபவம் பெற்றிருக்கவேண்டும்; அல்லது ஒரு தொழிலில் பயிற்சி பெற்றிருக்க வேண்டும்; அதோடு இந்தக் கல் வித் திட்டத்தைச் சரியான மனப்பான்மையுடன், ஊக்கத்துடன், லட்சியத்தை நன்கறிந்து, சேவை செய்யக் கூடியவர்தான் என்ற நம்பிக்கைக்குப் பாத்திரராக இருக்கவேண்டும்.

இவர்களுக்குக் கொடுக்கும் பயிற்சியின் பாடத் திட்டத்தில் பின்வரும் அம்சங்கள் இருக்கவேண்டும்:

(ஏ) பஞ்சு வெட்டிப் பட்டை போடுவதும், தக் ளியில் நூல் நூற்பதும். (பொறுக்கப்பட்ட அடிப் படைத் தொழில் வேறு ஏதாயிருந்தாலும் நூல் நூற் றல் கட்டாயப் பாடமாகும்.)

(பீ) மேலே விவரிக்கப்பட்டுள்ள அடிப் படைத் தொழில்களில் ஏதாவது ஒன்றில் பள்ளிக் கூடச் சிறுவர்களுக்கு ஆரம்பத்தில் 3 வருஷத்தியப் படிப்புக்குள்ளதாவது சொல்லிக் கொடுக்கச் சக்தி யிருக்கும்படி உபாத்தியாயருக்குப் பயிற்சி யளிக்கப் பட வேண்டும்.

(ஸி) உடலமைப்பு சாஸ்திரம், சுகாதார சாஸ்திரம், "நல்ல உணவு" பற்றிய அறிவு.

(டி) தொழிற் பள்ளிக்கூடத்தைப் பற்றிய அடிப்படைக் கொள்கைகள்; அதற்கும் சமூகத்துக்கு முள்ள சம்பந்தம்.

(இ) கைத்தொழில், வாழ்க்கை, படிப்பு மூன்றுக்கும் பரஸ்பரம் சம்பந்தமுள்ள முறையில் கல்வி கற்பிக்க ஒரு திட்டம் வகுத்து உருப்படுத்துதல்.

(எப்) இந்திய தேசீயக் கிளர்ச்சியின் சரித்திரமும் இந்த நூற்றாண்டில் உலகில் ஏற்பட்ட முக்கியமான உலக இயக்கங்களும்.

(ஜி) உதாரணப் பள்ளிக்கூடத்தில் 25 பாடங்கள் சொல்லிக் கொடுக்கச் சொல்வது.

(ஏ) மேற்பார்வை

புதிய பள்ளிக்கூடங்களுக்குப் புது முறையில் பயிற்சி பெற்ற உபாத்தியாயர்கள் எவ்வளவு அவசியமோ அது போலவே, மிகவும் திறமையும் அநுதாபமு முள்ள மேற்பார்வையாளரும் இருப்பது அவசியம்.

"மேற்பார்வை" யென்பது சற்றுச் சாதுர்ய நுணக்கமுள்ள வேலை; ஆகையால் புதிய பள்ளிக்கூட விஸ்தரிப்புக் கேற்றபடி, போதிய தொகையில் 'மேற்பார்வை அதிகாரிக'ளைத் தயாரிப்பதற்கான பயிற்சிக்கும் ஏற்பாடு செய்யவேண்டும்.

மேற்பார்வை யதிகாரிக்குப் பின்வரும் யோக்யதாம்சங்களாவது இருக்கவேண்டுமென்பது எங்கள் அபிப்பிராயம். முதலில் அவர் இத் திட்டத்தின்படி உபாத்தியாயராக இருப்பதற்குள்ள பூர்ணமான பயிற்சி பெற்றிருக்கவேண்டும். அந்தப் பயிற்சிக்குப் பிறகு 2 வருஷக் காலம் உபாத்தியாயராக இருந்து வெற்றிகரமாக வேலை செய்திருக்க வேண்டும்; பிறகு "நிர்வாகம், மேற்பார்வை" இரண்டிலும் ஒரு வருஷம் விசேஷப் பயிற்சி பெற்றிருக்க வேண்டும்.

மேற்பார்வை யென்பது, சாதாரணமாக இப்போதிருப்பது போன்ற "இன்ஸ்பெக்ஷன் வேலை" யன்று. பள்ளிக்கூடத்திலுள்ள உபாத்தியாயர்களை விட அதிக அநுபவமும், அறிவும் பெற்றவர்களாக இருந்து, பள்ளிக்கூட உபாத்தியாயர்களுக்கும் நிர்வாகிகளுக்கும் யோசனையும் புத்திமதியும் சொல்லக் கூடிய நிலைமையில், அவர் இருக்கவேண்டும். இந்தக் கல்வித் திட்டமாகிய பெரிய சோதனை முயற்சியில் அவர்கள் தலைமை வகிக்கும் யோக்கியதையுடன் விளங்கவேண்டும். அவர்கள் தமது இந்த வேலையைச் செய்யவேண்டுமானால் சாதாரணமான நிர்வாக வேலையும், கணிக்கை வேலையும் அதிகம் இருக்கக்கூடாது. ஆகையால் இவர்களுடைய தொகை சற்று மிகுதியாக இருக்கவேண்டும். ஒவ்வொரு "மேற்பார்வையாள"ரின் (ஸூபர்வைஸர்) பிரதேசமும் மிகப் பெரியதாக இருத்தல் கூடாது.

எங்களது இந்த யோசனையை நடத்திவைக்கப் பணச் செலவு அதிகம் ஆகத்தான் செய்யும். ஆனால் இவ் விஷயத்தில் சிக்கனம் செய்வது புத்திசாலித்தன மான சிக்கனமன்று; கஞ்சத்தனமே யாகும்.

(பி) பரீக்ஷைகள்

இப்போதுள்ள கல்வி முறையிலுள்ள பரீக்ஷை முறை, கல்வியைப் பாழ்படுத்தும் பெரிய சாபத்தீ டாக இருக்கிறது. கல்வி முறையே மோசம்; அதி லுள்ள அற்ப சொற்பமான நற்பயனும் பரீக்ஷை களில் செலுத்தப்படும் அளவு கடந்த முக்கியத்தால் பாழாகிறது. மாணவர்களின் வேலையையும் பள் ளிக்கூடத்தின் வேலையையும் மதிப்பிடுவதற்குப் பரீக்ஷைகள் சரியான சோதனையுமல்ல; பூர்ணமான சோதனையுமல்லவென்பதே இப்போது சாதாரண மாக நிபுணர்களின் அபிப்பிராயம். பரீக்ஷையென்ற சோதனை பூர்ணமற்றது; நம்ப முடியாதது; நிர்ணய மற்றது; உறுதியான எந்தச் சித்தாந்தத்துக்கும் இடம் தராதது. நமது புதிய தேசியக் கல்வித் திட் டத்தில் இந்தப் பரீக்ஷைச் சனியனின் சீர்கேடு புகுந்துவிடாமல் பாதுகாக்க வேண்டும்.

பரீக்ஷைகளால் என்ன பயன் எதிர்பார்க்கப் பட்டதோ அதே பயன் சில தணிக்கை முறைகளின் மூலம் கைகூடும்படி செய்யலாம். ஒவ்வொரு பிர தேசத்திலும் பள்ளிக்கூடங்கள் செய்துள்ள வேலையை ஒரு இன்ஸ்பெக்டர் மதிப்பிடலாம். சில மாணவர்களைப் பொறுக்கி இன்ஸ்பெக்டர்கள் அவர்

களுடைய அறிவை அளந்துவிட முடியும். இதைக் கொண்டு பொதுவாக மாணவர்களின் நிலைமையும் எவ்வாறிருக்கிறதென்று பார்த்துக் கொள்ளலாம்.

பாடத் திட்டத்தை அவ்வப்போது கவனித்துச் சீர்திருத்துவதற்கு ஜவாப்தாரியான 'கல்வி போர்ட்' என்ற ஸ்தாபனத்தின் யோசனைப்படியே இந்தச் சோதனைகள் நடத்தப்படவேண்டும். நடத்தப்படும் சோதனை பாடத் திட்டத்தின் எல்லா அம்சங்களுக்கும் வியாபிப்பதாய் இருக்கவேண்டும்.

இந்த முறையை அநுஷ்டித்தால் பள்ளிக்கூடத்தில் படிப்பு நேரம் வீணாக விரயமாவதைத் தடுக்க முடியும். இப்போதுள்ள கல்வி முறையில் மாணவர்களின் கடைசி வருஷப் படிப்பில் பெரும் பாகம் (புதிய விஷயங்களைக் கற்பதில் செலவிடப் படாமல்) பரீக்ஷைக்காக உருப்போடுவதில் வீணாகிறது. இவ்வாறு வீணாக்கப்படும் நேரம் சுமார் 6 வாரமாவது இருக்கும். இத் திட்டத்தில் உள்ள ஏற்பாட்டை அனுசரித்தால் அந்த 6 வார காலமும் அப் பள்ளிக்கூடத்தின் "அடிப்படைத் தொழி"லில் பயிற்சி அதிகமாவதில் செலவிடலாம். கிராமத்தின் முன்னேற்றத்துக்கான முயற்சிகளில் இந்த நேரத்தை உபயோகிக்க முடியும்.

பிறகு மாணவர்கள் மேல் வகுப்புக்கு மாற்றப் படும் விஷயத்தைக் கவனிப்போம். மாணவர்கள் அவ் வருஷத்தில் செய்துள்ள (படிப்பு) வேலையைப் பற்றிச் சரியான விவரக் குறிப்புக்கள் தயாரித்துக்

கொண்டு பள்ளிக்கூட உபாத்தியாயர்களே அந்த "வகுப்பு மாற்றும் வேலை"யைச் செய்யவேண்டும்.

எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் ஓரளவு திறமை இருக்கவேண்டு மென்பது முக்கிய மாகை யால், கல்வி போர்ட் வருஷத்துக் கொரு முறை, ஒவ் வொரு டிவிஷனிலு முள்ள பள்ளிக்கூடத்து மாண வர்களின் ஒரு தொகுதியினரின் திறமையைச் சோதித்துப் பார்க்கவேண்டும்.

எப்படியும் ஒரு மாணவன் ஏற்கனவே படித்த விஷயத்தை ஒரு வருஷம் செய்த வேலையைத் திருப்பி மறுபடியும் செய்யும்படி இருப்பதற்கு நியாயமில்லை. சாத்தியமான மட்டில் இது தவிர்க் கப்பட வேண்டும்.

ஒரு வகுப்பில் "தவறின" அதாவது "தேறாத" மாணவர்களின் தொகை அதிகமாக இருந்தால், அந்த உபாத்தியாயரிடம் ஏதாவது குறை யிருக் கிறதா என்பது கவனிக்கப்பட வேண்டும்.

ஒரு பள்ளிக்கூடத்தில் பல பகுதிகளிலும் "தேறாத" மாணவர்கள் ஜாபிதா அதிக மிருந்தால், அதன் நிர்வாகத்திலுள்ள முறைகள் கவனிக்கப்பட வேண்டும்.

பல பள்ளிக்கூடங்களிலும் "தேறாத"வர்கள் தொகை பொதுவாகக் காணப்பட்டால் பாடத் திட் டத்திலேயே ஏதோ கோளாறு இருப்பதாக நினைக்கவேண்டும். அப்போது பாடத் திட்டத்தின் கடுமையை மிதப்படுத்த வேண்டும்.

எப்படியும் மாணவர்கள் செய்த வேலையைத் திரும்பவும் செய்யும்படி இருக்க நியாயமில்லை.

மேலே குறிப்பிட்டபடி 'ஸாம்பில் சோதனை' கள் மூலம் கல்வி போர்ட், ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலுமுள்ள அடிப்படைத் தொழிலின் கல்விநிலையையும், உபாத்தியாயர்களும் மாணவர்களும் சேர்ந்து பள்ளிக்கூடத்தைச் சுற்றிலுமுள்ள சமூக வாழ்வின் முன்னேற்றத்துக்குச் செய்துள்ள சேவையையும் மதிப்பிட்டே, பள்ளிக்கூடத்தின் திறமையறியப்பட வேண்டும்.

வருஷா வருஷம் ஜில்லாதோறும், பள்ளிக்கூடங்கள் வேலையைப் பற்றி ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு செய்வது பள்ளிக்கூடங்கள் சிறப்பாக நடப்பதற்குத் தூண்டுகோலாக இருக்கும்.

### நிர்வாக விவரங்கள்

1. இரண்டாவது பகுதியில் விவரிக்கப்பட்ட கல்விலட்சியங்கள் நிறைவேறவேண்டுமாயின் மாணவர்கள் 7 வருஷக் காலம் பள்ளிக்கூடத்தில் இருக்க வேண்டும். ஜாக்கிரதையாகக் கவனித்துப் பார்த்த பிறகு நாங்கள் கொண்டுள்ள முடிவான அபிப்பிராயம், கல்வி கட்டாயமாக்கப்படுவது 7-வயதுக்குப் பிறகுதான். அடிப்படைக் கல்வி யென்பது ஆண் பெண் இருவருக்கும் ஒரே மாதிரி இருக்க வேண்டுமென்று நாங்கள் தீர்மானித்துக் கொண்டிருப்பதால் 7 வயது முதல் 14 வயது வரை எல்லா ஆண் பெண் குழந்தைகளுக்கும் இக் கல்வி "இலவசமாகவும் கட்

டாயமாகவும்" இருக்கவேண்டும் என்று சிபார்சு செய்கிறோம்.

இருந்தாலும் பெற்றோர்கள் விரும்பினால் 12-வது வயதுக்குப் பிறகு பெண் குழந்தைகளுக்குக் கல்வி "கட்டாய"மில்லாம லிருக்கலாம். (இது ஒரு பெற்றோரின் உணர்ச்சியைத் திருப்தி செய்வதற்கான ஒரு சலுகை.)

பள்ளிக்கூடத்துக்கு வரு முன்னர்

2. கட்டாயக் கல்வி 7-வயதுக்குப் பிறகுதான் என்று நிச்சயிக்கப்படுவதால் 7-வது வயதுக்கு முந்தின முக்கியமான ஒரு பருவத்தில் குழந்தைகள் மிகக் கொடிய வறுமையால் கல்வி யறிவும் சுமாரான வாழ்க்கை வசதியு மில்லாத பெற்றோர்களிடம் விட்டுவிடப் படுவதாகிய மோச நிலையில் இருப்பார்கள். ஆகையால் கட்டாயப் படிப்பின் ஆரம்ப வயதுக்கு முந்தின பருவத்தில் இக் குழந்தைகளைச் சரியாகப் பராமரிக்கச் சர்க்காரின் பொறுப்பிலோ, ஆதரவுடனோ ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும்; அதாவது 3-வது வயதுக்கும் 7-வது வயதுக்கு மிடையே யுள்ள பருவத்தில் குழந்தைகளின் சரியான பராமரிப்புக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்றே எங்களுக்குத் தோன்றுகிறது. பணக் கஷ்டத்தைப் பார்க்கும் போதுதான் மிகவும் வருத்தமாக இருக்கிறது; ஆகையால் நாங்கள் தெளிவாக அவ்வாறு சிபார்சு செய்யவில்லை. ஆனாலும் இவ் விஷயத்தில் சர்க்கார் தன் பொறுப்பை மறந்து

விடக்கூடாது. நாங்கள் உத்தேசிக்கும் "அடிப் படைக் கல்வி"த் திட்டம் சரியாக வேலை செய்து, கல்விக்கும் சமூக வாழ்வுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுமானால், இது ஸ்திரமாக ஸ்தாபிதமாகி விட்டால், பிறகு "படிப்புக்கு மூந்தின பருவத்து"ப் பிரச்னை மிகவும் சுலபமாகத் தீர்ந்து விடும்; ஏனென் றால் வீட்டிலேயே குழந்தைக்கு நல்ல பயிற்சி கிடைக் கும். தவிர, இக் கல்வித் திட்டம் வயது முதிர்ந்த வர்களுக்குக் கல்வி வாசனை ஏற்படவும் உதவியா கும். "வயது முதிர்ந்தவர் கல்வி"ப் பிரச்னையும் சீக் கிரமாக மேற்கொள்ள வேண்டிய ஒரு வேலை யென் பதை இங்கு குறிப்பிடுகிறோம்.

பாடத் திட்டத்தின் ஒவ்வொரு பிரிவுக்கும் எவ் வளவு நேரம் செலவிடப்பட வேண்டு மென்பதற்கு ஒரு மதிப்புப் போட்டுப் பார்த்திருக்கிறோம். தினசரி பள்ளிக்கூட நேரத்தைப் பின்வருமாறு பல பாடங் களுக்குப் பங்கிடலாம் :—

| | |
|---|---|
| அடிப்படைக் கைத்தொழில் | 3 மணி 20 நிமி. |
| ஸங்கீதம், படமெழுதுதல், கணக்கு | 40 ,, |
| தாய்ப் பாஷை | 40 ,, |
| சமூகப் பாடங்கள், ஸயன்ஸ் | 30 ,, |
| தேகாப்பியாஸம் | 10 ,, |
| இடை நேர ஓய்வு | 10 ,, |
| | 5 மணி, 30 நிமி. |

இவ்வாறு "மதிப்பு" தயாரித்ததில், நூற்றல், நெசவு என்பதை "அடிப்படைத் தொழி"லாக வைத்துக் கொண்டோம். வேறு தொழில் பொறுக்கப்பட்டால் அதற்கேற்றவாறு மாறுதல் இருக்கலாம்.

எப்படியாயினும் கைத்தொழிற் பயிற்சி நேரம் 3 மணி 20 நிமிஷத்துக்கு அதிகமாக இருக்கக் கூடாது.

3. வருஷத்தில் 288 நாள், அதாவது சராசரி மாதம் 1-க்கு 24 நாட்கள் பள்ளிக்கூடம் வேலை செய்யுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

4. மாணவர்களில் ஒவ்வொருவருக்கும் அக்கறையும் ருசியும் வேறுபட்டிருக்கக் கூடுமாகையால், ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் பல வேறு தொழில்கள் அடிப்படைத் தொழிலாகக் கற்க வசதி யிருக்க வேண்டும்.

கடைசி 2 வருஷப் படிப்பிலாவது இவ்வாறு மாணவர்கள் இஷ்டம்போல் ஏதேனும் ஒரு தொழிலைப் பொறுக்கிக்கொள்ள வசதி யிருக்கும்படி பல தொழில்கள் இருக்கவேண்டும்.

5. ஒவ்வொரு பள்ளிக்கூடத்துக்கும் ஒரு பயிர்த் தோட்டமும், விளையாட்டு மைதானமும் இருக்கவேண்டும்.

6. புஷ்டி யம்சங்கள் சரியான முறையில் அமையப் பெறு.ர்க்காணவுக்கும், மாணவர்களின்

படிப்பில் காணும் பிற்போக்குக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு என்பது ஆராய்ச்சிக்காரர்கள் கண்டுள்ள முடிவு.

நமது கிராமாந்தரச் சிறுவர்களின் உணவு புஷ்டித் தன்மையில் சீர்கெட்டிருப்பதால் பள்ளிக்கூட நேரத்தில் சிறுவர்களுக்கு ஒரு நல்ல சிற்றுண்டியளிக்கப்படுவதற்கு முயற்சிகள் நடக்கவேண்டும். இவ் விஷயத்தில் ஏற்படும் செலவுக்குச் சர்க்கார் பொதுஜனங்களின் ஒத்துழைப்பைப் போதிய அளவு பெற முடியுமென்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது.

---

அநுபந்தம்-2.

## வார்தா கமிட்டி

மகாத்மா காந்தி தலைமையில் வார்தாவில் 23-10-37 தேதியில் கூடிய கல்வி மகாநாடு கீழ்வரும் அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு கமிட்டியை நியமித்தது. ஒரு கைத்தொழிலை ஆதாரமாகக் கொண்ட ஒரு அடிப்படையான கல்வித் திட்டம் தயாரிப்பதுதான் இவர்களுடைய வேலை.

### டாக்டர் ஜாகிர் ஹுசேன்: (கமிட்டித் தலைவர்):

இவர் ஜெர்மனியில் பெர்லின் சர்வகலாசாலையில் படித்து பி. ஹெச். டி. பட்டம் பெற்றவர். ஜெர்மன் பாஷையில் அறிஞர். ஜாமிய மில்லியா இஸ்லாமியா என்னும் முஸ்லிம் தேசீய சர்வகலாசாலைக்கு ஆரம்ப முதல் இவர்தான் தலைவர். ஆகவே ஆரம்ப உயர்தரக் கல்வி விஷயங்களில் இவருக்கு நல்ல அநுபவம் உண்டு.

### பேராசிரியர் க்வாஜா சயிடேன்:

அலிகார் முஸ்லிம் சர்வகலாசாலையைச் சேர்ந்தவர். இங்கிலாந்தில் லீட்ஸ் சர்வகலாசாலையில் படித்து எம். ஏ. யுடன் எம். இடி. (கல்வி நிபுணத்வ) பட்டமும் பெற்றவர்.

### ஸ்ரீ. வினோபா பாவே:

இவர் கலாசாலைகளில் கல்வி பயிலாவிட்டாலும், அநுபவத்தில் அறிஞர். இருபது வருஷங்களுக்கு மேலாகக் கல்வி விஷயத்தில் ஈ[illegible]ர்க்கானவுக[illegible]

ஸ்ரீ. காகா சாகேப் கலேல்கார்:

இவர் வாழ்க்கை முழுவதும் கல்விக்காக அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது. தாகூர் நிறுவிய சாந்திநிகேதனத்தில் ஆசிரியரா யிருந்தவர். சபர்மதி சத்தியாக்ரக ஆசிரமக் கலா சாலைக்கும், குஜராத் வித்யாபீடத்திற்கும் தலைவராயிருந்தார். இப்பொழுதும் கல்வி போதனையில் ஈடுபட்டிருக்கிறார். பம் பாய் சர்வகலாசாலையில் பி. ஏ. பட்டம் பெற்றவர்.

ஸ்ரீ. கிஷோரிலால் மஷ்ரூவாலா, பி.ஏ., எல்.எல்.பி.

பம்பாய் சர்வகலாசாலையில் பட்டம் பெற்றவர். சபர்மதி ஆசிரம கலாசாலை ஆசிரியரா யிருந்தார். குஜராத் வித்யாபீடத் தின் ரிஜிஸ்ட்ராராகவும் பேராசிரியராகவும் இருந்தவர். கல்வி விஷயங்களைப் பற்றி நன்றாய் ஆராய்ச்சி செய்து பல புத்த கங்கள் எழுதியிருக்கிறார்.

ஸ்ரீமதி அஷா தேவி:

ஆங்கிலத்திலும், சமஸ்கிருதத்திலும் இரண்டு எம்.ஏ. பட்டங்கள் பெற்றவர். காசி சர்வகலாசாலையில் படித்தவர். அதே ஸ்தாபனத்தின் மாதர் பிரிவுக்கும் வார்தா மஹிள வித்யாலயத்திற்கும் தலைவரா யிருந்தவர்.

ஸ்ரீ. ஸ்ரீ கிருஷ்ணஜாஜூ: பி.ஏ., பி.எல்.

அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தின் நிர் வாக போர்டுத் தலைவரா யிருந்தார். அகில இந்திய சர்க்கா சங்க வேலையிலும் ஈடுபட்டவர். கைத்தொழில் விஷயங்களில் அதிக அநுபவம் பெற்றவர்.

பேராசிரியர் கே. டி. ஷா. பி.ஏ. (பம்பாய்), பி. எஸ். ஸி. (லண்டன்)

பாரிஸ்டர். சர்வகலாசாலை விஷயங்களில் அதிக அநுபவம் வாய்ந்தவர். பொருளாதார விஷயமாக அநேக புத்தகங்கள் எழுதியிருக்கிறார். காங்கிரஸ் அமைத்த கடன் விசாரணைக் கமிட்டியின் அங்கத்தினரா யிருந்தவர்.

ஸ்ரீ. ஜே. ஸி. குமரப்பா:

அமெரிக்காவில் கொலம்பியா சர்வகலாசாலையில் எம்.ஏ. பட்டமும் ஸிராக்யூஸ் சர்வகலாசாலையில் பி. எஸ். ஸி. பட்டமும் பெற்றவர். அக்கவுண்டன்டு உத்தியோகத்தில் உயர்ந்த ஸ்திதியில் இருந்தவர். 1929-ல் இந்த ஸ்தானத்தை உதறித் தள்ளிவிட்டு குஜராத் வித்யாபீடத்தில் பொருளாதாரப் பேராசிரியராகச் சேர்ந்தார். குஜராத் மடார் தாலூகா பொருளாதார நிலைமையைப் பற்றி ஆராய்ச்சி செய்தார். கடன் விசாரணைக் கமிட்டி அங்கத்தினரா யிருந்தார். அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தின் காரியதரிசி.

ஸ்ரீ. அரியநாயகம், பி. ஏ., பி. இடி.:

இவர் வெளிநாடுகளிலேயே கல்வி பயின்றவர். எடின்பரோ, கேம்பிரிட்ஜ், சர்வகலாசாலைகளில் கல்வி நிபுணத்வ பட்டங்கள் பெற்றவர். ஆசியக் கலைஞான சங்கத்தின் அங்கத்தினர். பலவருஷங்களாகச் சாந்திநிகேதனத்தில் இருந்தார். இப்பொழுது வார்தா நவ பாரத வித்யாலயத்தின் தலைவர்.

இந்த அறிஞர்கள் தங்கள் அநுபவ மூலம் தயாரித்தது தான் வார்தா கல்வித் திட்டம்.

...ாக்கானவுக...

சென்னை, மாட... ...க்கப் பெற்றது.